ஸ்ரீ:

# உள்ளுறை.

---

ஸ்ரீ:

# முன்னுரை.

---

திருவல்லிக்கேணித் தமிழ்ச்சங்கக் காரியதரிசி ஸ்ரீமான் பந்தல்குடி திருமலை அய்யங்கார் ஸ்வாமி இந்தக் "**கம்பர்மாலை**"யை வெளியிட்டு தமிழுலகத்தோர் யாவரையும் புனிதமாக்கி விட்டார். கம்பராகிய ஒரு நந்தவனத்தில் புகுந்து, அவர் செய்யுட்களாகிய புஷ்பங்களைக் கொய்து, தன் சக்தியாகிய ஒரு நூலில் கோர்த்து, என்னைப் போல அஞ்ஞானிகளின் ஹ்ருதயமாகிய கூந்தலிற் சூட்டி, அதிலிருந்து பரிமளித்து வரும் ஸன்மார்க்க பரிபாகத்தைத் தான் அநுபவிக்கக் கோரியது போலும். இம் மாலை கலம்பகமா யிருப்பதால் இதற்கு ஒரு விசேஷ வாஸனை உண்டு. க்ஞாதாக்களையும் அஞ்ஞானிகளையும் கட்டிக் கூட்டிவைக்கும் வாசனையே அது. தொடுத்த கூலி அவருக்கு உண்டு. இதைப் படித்து இதிலுள்ள ஸூக்திகளின் ப்ரபாவத்தை நன்கு அறிவதே அவர் தேடும் கூலி.

கம்பரின் ஸூக்திகள் நமக்கு ஒரு விசேஷப் பெருமையுள்ளன. இவர் ஒரு வரகவி; தெய்வகடாக்ஷம் பெற்றவர்; புனிதமாம் காவிரி நாட்டிற் பிறந்தவர்; நரனைத்துதிக்கா நாவு படைத்தவர்; ஆதி தெய்வமான ஸ்ரீமந் நாராயணனையே பரம்பொருளெனப் பரக்கப் பேசியவர்; ஆழ்வார் கோஷ்டியில் ஈடுபட்டவர்; லோப மத மாத்ஸர்யாதிகளை த்யஜித்தவர். எந்தப் பரம்பொருளைத் தாம் துதிசெய்து அவர் அயனத்தைச் சந்திர சூரியர்கள் இவ்வுலகிலுள்ள காலமளவும் ப்ரசம்ஸிக்கும் படி அநுக்ரஹித்த காரணமாக அந்தப் பரனுக்கே இவ்வுலகிற்கிட்டாத ஒரு பிருதை இவர் அடைந்தாரென்றால்

இம்மஹானின் கௌரவம் வாசாமகோசர மாகும். பகவானுக்கு ஸ்ரீ ராமாவதாரத்தில் **சக்ரவர்த்தித் திருமகன்** என்ற பிருதே பெரிதாய்ப் போயிற்று. நம் கவிக்குச் **சக்ரவர்த்திப்** பட்டம் கவி ஆதிக்யத்தால் கிடைத்து விட்டது. அழகும் ஆழமும் காண்பிக்கும் திறமைபெற்ற கண்ணியர் இவர்.

" அம்பிலே சிலேயைநாட்டி அமரர்க்கன்ற முதமீந்த
தம்பிரானென்னத் தானும் தமிழிலே தாலேநாட்டிக்
கம்பநாடுடைய வள்ளல் கவிச்சக்ர வர்த்திபார்மேல்
நம்புபா மாலேயாலே நரருக்கின்ற முதமீந்தான் ".

என்று புகழப்பட்டவர் நம் கம்பநாட்டாழ்வார்.

ஆர்யா வர்த்தத்திற்கு ஆதிகவியாக அவதரித்து, அமாநுஷ்யப் பொருளே ப்ரதிபாதிக்கும் காவ்யவேதமாகிற ஸ்ரீமத் ராமாயணத்தை அநுக்ரஹித்த அவ்வால்மீகியின் அபராவதாரமாகக் கூறப்படும் தமிழ்நாட்டு வள்ளல் கம்பர். வால்மீகி அநுக்ரஹித்த வடமொழி ராமாயணம் ஆதிகாவ்யம். கம்பர் அருளிய தென்மொழி ராமாயணம் தமிழில் முதல்தரம் ஏறப்பெற்ற காவியம். ஸம்ஸ்க்ருத கவித்திறமையில் எப்படி இன்னும் வால்மீகி முற்பிலேயே நிற்கிருரோ அப்படியே கம்பர் தென்மொழியில் அதிக்ரமிக்கப்படாதவர்.

ஒரு பெரியார் கூறினர் " வால்மீகியை வியந்து கூறுவதோ, கம்பரையே உவந்து கூறுவதோ எனத்துணிதல் கூடாமல் இடர்ப்பட்டோம் " என்று. அநேகமாக கம்பர் வால்மீகியை அநுஸரித்தே நிற்கிருர். ஆனல் வால்மீகிக்கு 'உள்ளதை உள்ளபடி சொல்லக்கடவாய்' என்கிற நிர்ப்பந்தத்திற்குக் கட்டுப்படும்படியாக ஏற்பட்டு விட்டபடியால் கவியின் திறமையை விஸ்தாரமாக வீசிவிட்டு அநுபவிக்க முடியாமற்போனது போலும். கம்பர் அந்த நிர்ப்பந்தத்தில் நிறுத்தப்படாததினல் ஸ்ரீராமபிரான் குணங்களேயும், செய்கைகளேயும் விசாலமாக அலங்காரச் சொற்கள், கற்பனேகள் இவைகளேச் செவ்வையாகச்

சொல்ல அவகாசம் கிடைத்தது. ஸ்ரீராமனை கேவலம் மநுஷ்யனாக வைத்துப்பாட அவருக்கு மனம் இடம் கொடுக்கவில்லை போலும். இவர் இராமாயணத்தில் 'இரணியன் வதைப்படலம்' என்று ஒரு படலத்தை யுத்தகாண்டத்தில் அமைத்துள்ளார். அதில் விபீஷணனைக் கொண்டு இராக்கதர் குலத்தில் அவதரித்த பக்த சிரோமணியான பிரஹ்லாதாழ்வான் வைபவம் வெளியிடப்பட்டிருக்கிறது. இது வால்மீகியத்திலில்லாது போனாலும் ஒரு ஆச்சரியமான அமைப்பாகவே இருந்து வருகிறது.

கம்பரைப்பற்றி வியாஸம் எழுத வந்தவனல்லன். அவரைப்பற்றி எழுத அடியேன் சக்தனல்லன். இந்த **கம்பர்மாலை** சம்பந்தமாக சில வார்த்தைகள் சொல்லி நிறுத்திக் கொள்கிறேன். கம்பரை நம் ஸித்தாந்திகள் **கம்பநாட்டாழ்வார்** என்று கணிக்கிறார்கள். ஆழ்வார்கள் காலத்துக்கு நிரம்பப்பிந்தியும், ஆசார்யர்கள் கால நடையிலும், இவர் அவதரித்தார். இவர் காலம் கி. பி. பன்னிரண்டாம் நூற்றாண்டின் பிற்பாதி எனச்சிலர் கொள்கை. இவர் வைணவ ஸித்தாந்தத்தில் பரிபூர்ண விச்வாஸமுள்ளவர். சடகோபன் என்று வழங்கி வருபவரும், ஆழ்வார்களுக்குள் அக்ரேசரரும், ஆசார்ய கூடஸ்தராகவும் கொண்டாடப் பெற்றுவரும் நம்மாழ்வாருடைய பரிபூர்ண கடாக்ஷம் பெற்று, அவரைத் துதிசெய்த மஹான் இவர். இவரது இராமாயணத்திற்கு எவ்வளவு கௌரவம் நாம் பாராட்டுகிறோமோ அவ்வளவு கௌரவம் வஹிக்கப் பெற்றது இக்கம்பரின் **சடகோபரந்தாதி**. இன்னும் சில நூல்களும் இவர் இயற்றியுள்ளார்.

ஒரு தேசத்திற்கோ, அத்தேசத்தின் கல்விக்கோ, அதில் வசிக்கும் ஜனங்களின் தெய்வபக்தி அபிவிருத்திக்கோ பாடுபட்ட பெரியோர்களை எப்படி ஒருவன் பஹுமானிக்கலா மென்றால், அவர்கள் நடத்திக் காட்

டிய வழியைக் கைப்பற்றியும், அவர்கள் ஓதிய நூல்களை அநுஸந்தானம் பண்ணியும், அவர்கள் உரைத்த நீதிச் சொற்களை அநுஸரிப்பதுமேயாம். கம்பர் ஆழ்வார்களின் அருளிச் செயல்களில் ஆழங்காற்பட்டவர். இவரது தெய்வபக்திக்கு நிகரில்லை. ஸ்ரீராமனை அவர் உகந்து பாடும் பாட்டுக்கள் எவ்வித அத்வைதீக மதத்தைக் கைப் பற்றினவரின் மனத்தையும் கலக்கும். இப்பேர்ப்பட்ட மஹான் அவதரித்த நாட்டில் நாம் பிறந்ததற்குப் பிர யோஜனம் இப்பொழுது வெளியிட்டிருக்கும் இக்கவியின் பாடல்களிலிருந்து எடுத்துத் தொடுத்த இம்மாலையைத் தினந்தோறும் ஒரு தரமாகிலும் வாயாரச் சொல்லியும், காதாரக் கேட்டும், மனதாரத் துதிப்போமாகில் பகவத் பக்தர்களாகி, பரன் அருளுக்குப் பாத்ரமாகி, ஜன்ம ஸாபல்யம் பெறுவோ மென்பதற்கு ஐயமேயில்லை. கம்பர் வாழ்க. அவரது நூல்கள் வாழ்க. அவரபிமானி கள் செழித்து வாழ்க. ஸர்வம் சுபம்.

ஸ்ரீராம்நகர்,
சென்னை,
7—6—41.

ஆர். ராமஸ்வாமி அய்யங்கார்.

ஸ்ரீ :

# முகவுரை.

---

நாரணனம்பி நடையிலுயர்ந்த
பூரண மாக்கதை நாரதன் கூற
ஆரண மாமொழி அறிஞனு வந்தே
காரணன் கேட்பக் கவிதை செய்தானே. 1

கம்பனென்னு மக்காள மேகப்பரன்
நம்பன் மாறனாய் நானிலம் வந்துபின்
கம்பனாகிக் கழிபெருந் தேவி சீர்ப்
பம்பு மாக்கதை பாடி யுயர்ந்தனன். 2

"கற்பாரி ராமபிரானை யல்லால் மற்றுங் கற்பரோ?
புற்பா முதலாப் புல்லெறும்பாதி யொன்றின்றியே
நற்பால யோத்தியில் வாழும் சராசரம் முற்றவும்
நற்பாலுக்கு உய்த்தனன் நான்முகனார் பெற்ற நாட்டுளே."

—(திருவாய் மொழி. 7-5-1)

என்ற தென் குருகூர்ச் சடகோபன் பாசுரப்படி, கல்வியில் ஆதரம் உடையார் சக்ரவர்த்தித் திருமகனான வுபகாரசீலனை யல்லது மற்றுங் கற்கத் துணியார். கற்றதனாலாய பயன் வாலறிவனான வய்யனின் நற்றாள் தொழுதலே. அவன் துயரறு சுடரடி தொழுபவரே எழுவர். தொழாக்கால் எழுச்சி யில்லை. 'அறிந்தார் பிறந்தாருயர்ந்தே.' 'வார்த்தை யறிபவர் மாயவற்காளன்றி யாவரோ!' 'மாமேகம் ஶரணம் வ்ரஜ அஹம் த்வா ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி' (என்னையே பற்று. ஸகலவிரோதிகளையும் நானே போக்கி யென்னைத் தருவன்) என்றது நல்வார்த்தை. அகாரவாச்யனின் திருத்தாள் கொள்பவரே துன்பற்று விளங்குவர். அவன் சரணே சரண் என்னும் துணிவு பூண்டொழுகுபவரே பிரபந்நர்கள். புகல் புகுந்தவனைப் போற்றும் அறத்திறனே நற்றிறன். அடைந்தவர்க்கு அருளுதலே ஆண்மை.

**'அறந்தலை நிறுத்தி, வேதம் அருள் சுரந்து அறைந்த நீதித்திறம் தெரிந்து, உலகம் பூணச் செந்நெறி செலுத்தித், தீயோர் இறந்துக நூறித், தக்கோர் இடர் துடைத்தேக விண்டு பிறந்தனன்' என்கிற படியே, ஸர்வேச்வரன் ஒரு திரேதாயுகத்திலே சக்ரவர்த்தித் திருமகனாய் அவதரித்த காலத்திலே ஸ்ரீவால்மீகி பகவான் பிரமனின் புதல்வரான ஸ்ரீநாரத**

பகவான் பக்கலிலே இவ்வவதார விருத்தாந்தத்தைச் சிரவணம் பண்ணி, ஸரஸ்வதீ வல்லபனான அந்தணனின் அநுக்ரஹத்தையும் பெற்று, ஸ்ரீராமாயணமாகிற பிரபந்தத்தை அருளிச் செய்தான். 'மிதிலைச் செல்வி உலகுய்யத் திருவயிறு வாய்த்த மக்கள் செம்பவளத்திரள் வாய்த் தன் சரிதை கேட்டான்' என்றபடி, இம்மாண் கதைக்கு இறையாகிய இராமபிரான் குசலவர் கானம் பண்ணக் கேட்டு மகிழ்ந்தனன்.

"நாரணன் விளையாட்டெல்லா நாரத முனிவன் கூற
ஆரணக் கவிதை செய்தானறிந்த வான்மீகி யென்பான்
சீரணிசோழ நாட்டுத் திருவழுந்தூருள் வாழ்வோன்
காரணக் கொடையான் கம்பன் தமிழினாற் கவிசெய்தானே."

நான்கு வேதங்கள் ஒரு தட்டிலும், தான் ஒரு தட்டிலுமாக நிற்கும் பெருமையுடையது ஸ்ரீராமாயணம். இதனை இதிஹாஸமாக வறிந்தனர் முன்னோர். சரணாகதி வேதமாகக் கண்டவர் சந்தமிகு தமிழ் மறையோன் தூப்புற்றேன்றும் வேதாந்த குரு.

கல்வியிற் பெரிய கம்ப நாட்டாழ்வார், வான்மீகியாரைப் போற்றியுள்ளது முதற்கண் அறிதல் வேண்டும்.

"வாங்கரும்பாத நான்கும் வகுத்த வான்மீகி யென்பான்";
"வடநூன் முனிவர்"; மாக்கதை செய்த செய்தவன்";
"பொய்யில் கேள்விப் புலமையினோர்;"
"தேவபாடையினிக் கதை செய்தவர், மூவரான வர்தம் முளுமுந்திய, நாவினோர்."

என்று மஹாகவி கூறுதல் காண்க.

பிரபந்தத்தைக் கொண்டாடு மிடத்து,

"காசில் கொற்றத் திராமன் கதை";
"வைதவைவின் மராமர மேழ்தொளை
எய்த வெய்தவற் கெய்திய மாக்கதை";
"மாண் கதை";
"நடையி னின்றுயர் நாயகன் றோற்றத்தி
னிடை நிகழ்ந்த விராமாவதாரப் பேர்த்
தொடை நிரம்பிய தோமறு மாக்கதை."

எனக்கூறி மகிழ்வர். ஸ்ரீவான்மீகி பகவான் அருளிச் செய்த பிரபந்தத்துக்கு ஸ்ரீராமாயணம் என்பது தனிப்பெயர். வியாகரண நுட்பம் அறிந்த கம்பநாடர் தாமியற்றிய நூலுக்கு "இராமாவதாரம்" எனப் பெயரிட்ட வழகு நன்குணரற் பாற்று.

"கன்னன் பிறப்பும் பினுளிற்றுலங்கிற்று கம்பன்பிறப்
பின்னந் தெரிந்தார்களிலையில்லை முக்காலு மிதுமெய்ம்மையே."

என்று ஸ்ரீலஸ்ரீ திருமுருகதாச சுவாமிகள் சபதமிட்டுப் போந்தபின் இப்பெரும்புலவரின் சரிதையை ஆராயப்புகுதல் அறிஞர் செயலல்ல. அவரது பிரபந்தங்களினின்று அகச்சான்றுகளுடன் அவரை அநுபவிக்க முயலுதல் ஒரு முறையே.

"வெங்கண் சிவந்து வெடிவால் முறுக்கிவெ குண்டெழுந்தென்
னங்கம் பிளக்கவரும் புலியேயன்றி ரணியனைப்
பங்கம்படப்பட வள்ளுகிராலுரம் பற்றியுண்ட
சிங்கமிருப்பது காண்கெடுவா யென்றன் சிந்தையுள்ளே."

என்ற பாடலிலிருந்து திருநரசிங்க மூர்த்தியை அநவரதம் தியானித்து அவனது அருட்பேறு பெற்றவன் கம்பன் என்னலாம். பரம பாகவ தோத்தமனை ஸ்ரீ விபீஷணாழ்வான் வாயிலாக "இரணியன் வதை" யைப் பரக்கப் பேசித் தனது உபாஸனாமூர்த்தியைப் போற்றியிருப்பது இவரது பக்தியை நன்கு தெளிவிக்கின்றது.

கம்பர், "பெருமான் மருடஞ்சாய்க்கும்படிக்குக் கவி சொல்லு ஞானத்தமிழ்க்கடலே" என்பது மிகையாது. திருவரங்கத்தில் இவரது இராமாவதாரம் அரங்கேறியபோது,

"நசைதிறந் திலங்கப்பொங்கி நன்று நன்றென்னநக்கு
விசைதிறந் துருமுவீழ்ந்த தென்னவோர் தூணின்வென்றி
இசைதிறந்த மர்ந்தகையா லெற்றின னெற்றலோடும்
திசைதிறந் தண்டங்கீறிச் சிரித்தது செங்கட்சீயம்"

(இரணியன் வதைப்படலம். 127)

என்ற பாடலைப் பாடும்போது மேட்டழகிய சிங்கர் சிரக்கம்பம் செய்தா ரென்று கூறுப. மேலும், 'கம்பன்' என்பது சிங்கப்பிரானின்றிரு நாமம். சிங்கப்பிரான் பெருமை ஆராயுஞ் சீர்மைத்து. கம்பத்திடைத் தோன்றியவன் மாலாய கம்பன். இவனைத் 'தூணப்பன்'; 'கம்பத் திடையான்' என்று தொன்றுதொட்டு நற்றமிழர் நன்கு வணங்கி வரு கின்றனர். 'பெருந்தேவன்' என்பதும் அந்தியம்போதில் ஆளரியாய் வந்தவனைத்தான்.

"கம்பத்தினடியிற் கிடந்திட்டபடி நாமகரணஞ் செய்தா
ரும்பர்க்கு மெய்தாதபேறென்று சிலர்கண்டு வந்தோதினர்."

என்பது புலவர் புராணம். கம்பநாடென்பதும் செந்தமிழ் நாடே.

இப்புலவர் பெருந்தகை சர்வசரீரியான எம்பெருமானே பரனென் றும், அவனடி பணிந்தே யுய்யலாமென்றும், வீட்டுலக வின்பத்தை நல்குபவர் விஷ்ணுவே என்றும், சரணாகதியே சரமோபாய மென்றும், திருமகளோடு வருந் திருமாலே ஜகத்ரக்ஷகன் என்றும் நன்கு வெளி யிட்டுள்ளார்.

'பரதத்த்வம் ஸ்ரீமந் நாராயணனென்றும், அநந்யார்ஹசேஷத்வமே ஸ்வரூப மென்றும், குணநுபவஜநித ப்ரீதிகாரித கைங்கர்யமே புருஷார்த்தமென்றும், அஹங்காரமமகாரங்கள் தத்விரோதி யென்றும், தந் நிவ்ருத்திக்கும் கைங்கர்ய ஸித்திக்கும் ஸர்வஸுலபனன ஸர்வேச்வரன் திருவடிகளே உபாயமென்றும், ஜிதேந்த்ரியத்வம் தொடக்கமாகக் கைங்கர்யபர்யந்தமாக உபாயபலமென்றும்' இராமாவதாரத்தில் பலவிடங்களில் விளக்கமாகக் கூறுகிறார் கம்பநாடர்.

" என்று நான்முகன் முதல் யாரும் யாவையும்
நின்ற பேரிருளினை நீக்கி நீணெறி
சென்று மீளாக்குறி சேரச் சேர்த்திடு
தன்றிரு நாமத்தைத் தானுஞ் சாத்தியே." (49)

என்று பாலகாண்டத்துக் கடிமணப் படலத்தும்,

" அய்யனு மமைந்து நின்றானூழியானவ விறைமம்
நெய்சுடர் விளக்கிற்றேன்று நெற்றியே நெற்றியாக
மொய்ம்மயிர்ச்சேணை பொங்க முரணயிலுகிர்வாண் மொய்த்த
கைகளே கைகளாகக் கடைக் கூழை திருவாலாக." (21)

என்று சுந்தரகாண்டத்துச் சம்பு மாலி வதைப் படலத்தும் கூறு மாற்றால் கம்பர் மதம் இன்னதென்று இயம்பவும் வேண்டுமோ?
பரதன்சூள்செய்கின்ற இடத்தில்,

' தழைத்த தண்டுளவினேன் றலைவனல்லனென்
றழைத்தவன்.'

(அயோத்தியா காண்டம், பள்ளியடைப்படலம். 99)

என்று ஸ்பஷ்டமாகக் கூறுதலுங் காண்க. திருவெட்டெழுத்தை ஸ்மரித்திருக்கும் பெரியார் பக்கல் கம்பநாட்டாழ்வார் தனக்குள்ள ஈடுபாட்டை,

" நாராயணாய நமவென்னும் நன்னெஞ்சர்
பாராளும் பாதம் பணிந்தேத்து மாறறியேன்
காராரும் மேனிக் கருணைகரக் கடவுட்
காராதனம் என் அறியாமை யொன்றுமே."

என்றுரைத்து விளக்கினர்.

கம்பர் தமக்கு முன்னிருந்தவர்களின் நூற்கருத்தைப் பின்பற்றுவதும், இவருக்குப்பின் வந்தவர்கள் இவரது இராமாவதாரத்தைப் பின்பற்றி யிருப்பதும் நற்றமிழ் நூலாராய்ச்சி செய்தவர்கள் காணும் உண்மை. இதனைச்சற்று எடுத்துக் காட்டுவோம். நம்மாழ்வார் திருவாய்மொழித் தொடர்கள் பலவிடங்களிற் பயிலக் காணலாம்.

" ஆதியந்த மரீயென யாவையும்
ஓதிநரலகில்லன வுள்ளன
வேதமென்பன மெய்ந்நெறி நன்மையன்
பாதமல்லது பற்றிலர் பற்றிலார்."

என்ற பால காண்டக் கடவுள் வாழ்த்துப் பாசுரம்

"அறிந்தனவேத வரும்பொரு ணூல்கள்
அறிந்தன கொள்க வரும் பொருளாதல்
அறிந்தனரெல்லாம் அரியை வணங்கி
அறிந்தனர் நோய்களறுக்கு மருந்தே."

(திருவாய்மொழி 9-3-3)

என்ற திருவாய்மொழியின் சாரமே.

"கருமுகிரு மரைக்காடு பூத்துநீ
டிருசுடரிருபுறத் தேந்தியேடவிழ்
திருவொடும் பொலியவோர் செம்பொற்குன்றின் மேல்
வருவபோற் கலுழன்மேல் வந்து தோன்றினான்."

என்னும் திருவவதாரப் படலச் செய்யுளுக்கு,

"கருமாணிக்க மலேமேல் மணித்தடந் தாமரைக் காடுகள்போல்
திருமார்புவாய் கண்கை யுந்திகாலுடை யாடைகள் செய்யபிரான்";

(திருவாய்மொழி 8-9-1)

"காய்சினப் பறவை யூர்ந்து பொன்மலேயின்
மீமிசைக் கார்முகில் போல்
மாசினமாலி மாலிமானென்று
அங்கவர் படக்கனன்று முன்னின்ற
காய்சினவேந்தே! கதிர்முடியானே!
கலிவயல் திருப்புளிங்குடியாய்!"

(ஷ. 9-2-6)

என்ற பாசுரங்கள் எழுவாயாகக் காண்கின்றன.

"வானின்றிழிந்து வரம்பிகந்த மாபூதத்தின் வைப்பெங்கும்
ஊனுமுயிருமுணர்வும் போல்உள்ளும் புறத்து முளனென்ப"

என்ற அயோத்தியா காண்டக் காப்பு,

"தேனும் பாலுங்கன்னலு மமுதுமாகித் தித்தித்தென்
ஊனிலுயிரி லுணர்வினினின்ற வொன்றை யுணர்ந்தேனே."

(திருவாய்மொழி 8-8-4)

என்ற பாசுரத்தை அடியொற்றியதே.

கவந்தன் துதியில்,

'ஆண்பாலோ பெண்பாலோ வப்பாலோ வெப்பாலோ'

என்றது

'ஆணல்லன் பெண்ணல்லன் அல்லாவலியு மல்லன்'

(திருவாய்மொழி 2-5-10)

என்ற பாசுரவடியே.

"வந்தாய் போலே வாராதாய் வாராதாய் போல் வருவானே"

(திருவாய்மொழி 6-10-9)

என்ற திருப்பாசுர அடியை,

'வாராதே வர வல்லாய்' என 'விராதன் துதி' யிலும்,
'வருவாய் போல வாராதாய்' என 'விண்ணோர் துதி' யிலும் அமைத்தமை காண்க.

"நீலவரை இரண்டு பிறை கவ்வி நிமிர்ந்த தொப்ப
கோலவராக மொன்றாய் நிலங்கோட்டிடைக் கொண்ட வெந்தாய்"
(திருவாய்மொழி 10-10-7)

என்ற வடிகள்

"இளரகன் புகலுணின்றறியோர் கேழலாய்
இளையெனுந் திருவினை யேந்தி னைரோ
உளைவரும் பெருமையோ ரெயிற்றி னுட்புரை
வளரிளம் பிறையிடை மருவிற் றேன்றவே"
(அயோத்தியா காண்டம். கிளைகண்டு நீங்கு படலம். 119)

என்ற பாட்டாக விரிந்தன,

இதர ஆழ்வார்களின் பாசுரங்களையும் இங்ஙனே இவர் எடுத்தாளு தல் காணலாம்.

"பனிக்கடலிற் பள்ளிகோளைப் பழகவிட்டோடி வந்தென்
மனக்கடலில் வாழவல்ல மாய மணாள நம்பீ!";
"பறவையேறு பரம்புருடா! நீயென்னைக் கைக்கொண்டபின்
பிறவியென்னுங் கடலும் வற்றிப் பெரும்பத மாகின்றதால்."

என்ற பெரியாழ்வாரருளிச் செயலை அடியொற்றி,

"ஒப்பிறையும் பெறலரிய வொருவா மூன்றுவந் துறையு
மப்புறை யுடுறந்தடியே னருந்தவத்தாலனு குறலா
லிப்பிறவிக் கடல் கடந்தே னினிப்பிறவே னிருவினையுந்
துப்புறழு நீர்த்த சுடர்த் திருவடியாற் றுடைத்தாய் நீ."

என்ற விராதன் துதியாக வெழுந்தது போலும்.

"கனைத்திளங் கற்றெருமை கன்றுக் கிரங்கி
நினைத்து முலைவழியே நின்று பால் சோர"

என்ற ஆண்டாள் திருப்பாவையையும்,

"காலுண்ட சேற்றுமேதி கன்றுள்ளிக்
கனைப்பச் சோர்ந்த பாலுண்டு";
"கார்களென்ன வருங்கரு மேதிகள்
ஊரினின்ற கன்றுள்ளிட வுண்முலை
தாரை கொள்ளத் தழைப்பன சாலியே"

என்ற நாட்டுப் படலப் பாடல்களையும் ஒப்பிட்டுணர்க.

இனி, இராமாவதாரத்தில்,

"ஊருணி நிறையவு முதவுமாடுயர்
பார்கெழு பயன்மரம் பழுத்தற் றாகவுங்
கார்மழை பொழியவுங் கழனிபாய் நதி
வார்புனல் பெருகவும் மறுக்கின்றார்கள் யார்"

என்பது (அயோத்தியா காண்டம். மந்திரப் படலம். 82)

" ஊருணி நீர் நிறைந்தற்றே யுலகவாம்
பேரறிவாளன் றிரு"
" பயன்மர முள்ளூர்ப் பழுத்தற்றாற் செல்வ
நயனுடையான் கட்படின்"
" கைம்மாறு வேண்டா கடப்பாடு மாரிமாட்
டென்னாற்றுங் கொல்லோ வுலகு"

என்னும் திருக்குறள்களை யுட்கொண்டு எழுந்தது என்று துணியத்தகும்.

" மான நோக்கிற் கவரிமாவனைய நீரார்"

(அயோத்தியா காண்டம் - மந்திரப்படலம். 7)

என்பது,

" மயிர் நீப்பின் வாழாக் கவரிமாவன்னா
ருயிர் நீப்பர் மானம் வரின்"

என்னும் திருக்குறளைக் கொண்டு வந்தது,

" உரைசெயற் கெளிதுமாகி யரிதுமா மொழுக்கி னின்றான்"

(கிட்கிந்நா காண்டம். அரசியற்படலம். 44)

என்பது,

" சொல்லுதல் யார்க்கு மெளிய வரியவாஞ்
சொல்லிய வண்ணஞ் செயல்"

என்னும் திருக்குறளைக் கருதி வந்தது,

" கொடுப்பது விலக்கு கொடியோ யுனது சுற்ற
முடுப்பதுவு முண்பதுவு மின்றி விடுகின்றாய்"

(பால காண்டம் - வேள்விப்படலம். 33)

என்பது,

" கொடுப்பதழுக் கறுப்பான் சுற்ற முடுப்பதூஉ
முண்பதூஉ மின்றிக் கெடும்."

என்னும் திருக்குறளைப் பற்றி வந்தது

" கண்ணொடு கண்ணிணை நோக் கொக்கின் வாய்ச் சொற்க
ளென்ன பயனு மில"

என்ற குறளை,

" எண்ணரு நலத்தினா ளினைய நின்றுழி
கண்ணொடு கண்ணிணை கவ்வி யொன்றையொன்
றுண்ணவு நிலைபெறா துணர்வு மொன்றிட
அண்ணலு நோக்கினா னவளு நோக்கினாள்."

(பால காண்டம் - மிதிலைக் காட்சிப்படலம். 35)

என்று எழில்சிந்த எழுதி அமைக்கின்றார் நங்கவியரசர்,

" பெருமைக்கும் ஏனைச் சிறுமைக்குந் தத்தம்
கருமமே கட்டளைக் கல்"

என்னும் செவ்விய குறளின் திருந்திய அடிகள்,

" தருமம் பற்றிய தக்கவர்க் கெலாம்
கருமங் கட்டளை யென்றல் கட்டதோ"

(கிட்கிந்தா காண்டம். அரசியற்படலம். 16)

என்னும் கம்பர் அடிகளாக அமைந்து விளங்குகின்றது. இவை போற் பல காட்டலாம். விரிவஞ்சி இம்மட்டோடு நிறுத்துவாம். கம்பர், திருக்குறளை "எழுதுண்டமறை" என்று வழங்கலால் அவருக்கு அந் நூற்கண் உள்ள நன்மதிப்பினை எளிதிலறியலாகும்.

" உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்மற் றெல்லாரும்
தொழுதுண்டு பின் செல்வா ரென்றே யித்தொல்லுலகில்
எழுதுண்ட மறை யன்றோ இவருடனே இயலுமிது
பழுதுண்டோ கடல் சூழ்ந்த பாரிடத்திற் பிறந்தோர்க்கே."

(ஏரெழுபது. 19)

என்ற பாட்டிற் குறித்தது காண்க.

கம்பர் ஆற்றுப்படலத்து,

" புள்ளிமால்வரை பொன்னென நோக்கிவான்
வெள்ளி வீழிடை வீழ்த்தெனத் தாரைக
ளுள்ளி யுள்ளவெலா முவந்தீபுமவ்
வள்ளி யோரின் வழங்கின மேகமே"

எனப் பாடினர். இது திருத்தக்க தேவரின் சிந்தாமணிக்கண்,

" தேனிரைத்துயர் மொய்வரைச் சென்னியின்
மேனிரைத்து விசும்புற வெள்ளி வெண்
கோனிரைத்தன போற் கொழுந்தாரைகள்
வானிரைத்து மணந்து சொரிந்தவே"

என்னும் பாடற் கருத்தினைப்பற்றி வந்ததென்று கொள்ளலாம்.

நாலாயிர ப்ரபந்த வ்யாக்யாநங்கள் கம்பருடைய பிரயோகங்களில் சிலவற்றை எடுத்துக் காட்டியிருக்கின்றன.

" காமுற்ற கையறவோடு எல்லே யிராப்பகல்
நீமுற்றக் கண்டுயிலாய் நெஞ்சுருகியேங்குதியால்
தீமுற்றத் தென்னிலங்கை யூட்டினான் தாள் நயந்த
யாமுற்றதுற்றாயோ? வாழிகனை கடலே!"

(திருவாய்மொழி 2-1-3)

என்பதன் வியாக்கியானத்தில் பின்வருமாறு கூறப்பட்டுள்ளது.

" ஈடு * * * (தீ முற்றத்தென்னிலங்கை யூட்டினான்) - ராவண பயத்தாலே முன்பு அரை வயிறாக ஜீவித்த அக்நி, 'ஒள்ளெரி மண்டியுண்ண' என்கிறபடியே வயிறு நிறையவுண்டு ஜீவிக்கப் பெற்றதாயிற்று பெருமாளை அண்டை கொண்ட பலத்தாலே; "செந்தீயுண்டு தேக்கிட்டதே" என்னக் கடவதிறே".

"ஜீயர் அரும்பதம்:—" வயிறு நிறையவுண்டு" என்றதுக்கு ஸம்வாதம்—செந்தீ இத்யாதி—கம்ப நாடகத்திலே."

ஈண்டுக் காட்டிய மேற்கோள்,

"என்று கொல்குரங்கன்னதிவ் வலியுளதிலங்கை
நின்றுவெந்துமா நீறெழுகின்றது நெருப்புந்
தின்று தேக்கிடுகின்றது தேவர்கள் சிரிப்பார்
நன்று நன்று போர்வலியென விராவணனக்கான்"

(சுந்தரகாண்டம். இலங்கை யெரியூட்டுப் படலம். 46)

என்ற இராமாவதாரப் பாடலிலிருந்து காட்டப்பட்டதாகும்.

"அல்லலில்ின் பமளவிறந்தெங்குமழகமர் சூழொளியன்
அல்லி மலர்மகள் போகமயக்குக்களாகியு நிற்குமம்மான்
எல்லையில் ஞானத்தன் ஞானமஃதே கொண்டு எல்லாக்
[கருமங்களுஞ்செய்
எல்லையில்மாயனைக் கண்ணனைத்தாள்பற்றியானோர் துக்கமிலனே."

(திருவாய்மொழி 3-10-8)

என்ற பாசுரத்தின் முதலடியும்,

"(எங்குமழகமர்) - பாதாதிகேசம் அவயவங்களைத் தனித்துப் பார்த்தால் 'இங்கே அழகு குடிகொண்டது, இங்கே அழகு குடிகொண்டது' என்னும்படி பாதாதிகேசம் பழிப்பற்று." (ஈடு)

என்ற முப்பத்தாறுயிரப்படியும்,

"தோள்கண்டார் தோளே கண்டார்தொடு கழற்கமலமன்ன
தாள்கண்டார் தாளே கண்டார் தடக்கைகண்டாருமஃதே
வாள்கொண்ட கண்ணார் யாரே வடிவினை முடியக்கண்டார்
ஊழ்கொண்ட சமயத்தன்னானுருவுகண்டாரை யொத்தார்."

(பாலகாண்டம், உலாவியற்படலம். 19)

என்ற கம்பர் பாசுரத்தை நினைவுறுத்துகின்றன.

"ஒரு நாயக மாயோடவுலகுட னாண்டவர்
கரு நாய்கவர்ந்த காலர் சிதைகியபானையர்
பெருநாடு காணவிம்மையிலே பிச்சை தாங்கொள்வர்
திருநாரணன்தாள் காலம்பெறச் சிந்தித்துய்ம்மினோ."

(திருவாய்மொழி 4-1-1)

என்ற பாசுரத்தில்,

"உலகுடனாண்டவர்" என்பதற்கு,

"(உலகு) - கடல் சூழ்ந்த பூமிப் பரப்படங்கலும்; "மாந்தாதா: க்ஷேத்ர முச்யதே" - என்கிறபடியே முந்திரிகை நிலமுடையவனைப் போலே யாயிற்று ஆள்வது" என்ற ஈட்டுப் பகுதி,

"எய்யென வெழுபகையெங்கு மின்மையான்
மொய்பொருதின வுறுமுழவுத் தோளினன்
வய்யக முழுவதும் வறிஞனோம்புமோர்
செய்யெனக் காத்தினி தரசுசெய்கின்றான்"

(பாலகாண்டம். அரசியற்படலம். 12)

என்ற இராமாவதாரப் பாட்டின் ஈற்றடிகளின் கருத்தைத் தழுவியது.

"வலையுளகப் படுத்து என்னை நன்னெஞ்சங் கூவிக்கொண்டு
அலைகடற்பள்ளி யம்மானை ஆழிப்பிரான் தன்னைக்
கலைகொளகலல் குல்தோழீ! நங்கண்களாற் கண்டு
தலையில் வணங்கவுமாங் கொலோ? தையலார் முன்பே."

(திருவாய்மொழி 5.3.7)

என்ற பாசுரத்தின் ஜீயர் அரும்பதத்தில், "தலைமகள் தலையாலே வணங்கும்" என்றதுக்கு "தீவினை தீர்வரம் வேண்டி நான் தொழு தென்று விளம்புவாய்" என்று **கம்பனும்**, "தெய்வந் தொழாள் கொழு நற்றொழு தெழுவாள்" என்று வள்ளுவனும் சொன்னதை ஸம்வாத மாகக் கண்டுகொள்வது".

எனக் கூறப்பட்டுள்ளது, ஈண்டுக் குறிக்கப்பட்ட மேற்கோள்,

"ஈண்டு நானிருந்தின்னுயிர் மாயினும்
மீண்டுவந்து பிறந்து தன் மேனியைத்
தீண்டலாவதோர் தீவினை தீர்வரம்
வேண்டினு டொழுதென்று விளம்புவாய்."

(சுந்தரகாண்டம். சூளாமணிப்படலம். 35)

என்ற இராமாவதாரச் செய்யுளிலிருந்து காட்டப்பட்டதாகும்.

"நின்றவாறு மிருந்தவாறும் கிடந்தவாறும் நினைப்பரியன
ஒன்றலாவுருவாய் அருவாய நின் மாயங்கள்
நின்று நின்று நினைக்கின்றேன் உன்னை யெங்ஙனம் நினைகிற்பன்? [பாவியேற்கு
ஒன்று நன்குரையாய் உலகமுண்ட வொண்சுடரே."

(திருவாய்மொழி 5.10.6)

என்ற பாசுரத்தின் வியாக்கியானப் பகுதி பின்வருமாறு:—

"ஈடு * * * (கிடந்தவாறும்) * * ப்ரதிபிம்பயே - என்கிறதிறே - ஒரு கடலோடேயொரு கடல் ஸ்பர்த்தித்து கிடந்தாப் போலே யிருக் கையாலே; "**கருணை யென்னுங் கடல் கருங்கடலை நோக்கிக் கிடந்ததே**" என்றானிறே. அதாகிறது - பின்பு விடக்கடவதாகத் தொடுத்த அம்பு முன்பு விட மாட்டாமை யில்லையிறே; அப்படிப்பட்ட அம்பிருக்க, தந் தோள்வலி கிடக்க, தாம் போராதார் முகங்காட்டாதே யிருக்கப் பொறுத் துக் கிடந்த கிடையைச் சொல்லுகிறது."

இம்மேற்கோட் பகுதி,

" தருண மங்கையை மீட்பதோர் நெறிதரு கென்னும்
பொருணயந்து நன்றால் நெறிபடுக்கிய புல்லில்
கருணையங் கடல் கிடந்தனன் கருங்கடல் நோக்கி
வருண மந்திரம் எண்ணினன் விதிமுறை வணங்கி."

(உயுத்தகாண்டம், வருணனை வழி வேண்டு படலம், 5)

என்ற கம்பநாடர் பாடலிலிருந்து கொண்டதாகும். இப்பாடலின் மூன்றாமடியே ஈட்டிற் சிறிது திரிந்துகாணப்படுகின்றது. இப்பாடற் பகுதியே மீட்டும்,

" ஞாலத்தூடே நடந்தும் நின்றும் கிடந்திருந்தும்
சாலப் பலநாள் உகந்தோறுயிர்கள் காப்பானே!
கோலத்திரு மாமகளோடு உன்னைக் கூடாதே
சாலப்பல நாள் அடியேனின்னுந் தளர்வேனோ?"

(திருவாய்மொழி 6-9-3)

என்ற பாசுர வியாக்யானத்தில் வந்துளது. " ஈடு...(கிடந்தும்) * * * கடல் தன்னைப் போர அளவு உடைத்தாக நினைத்திருக்குமாயிற்று, அதுக்காக ஒரு கடல் ஒரு கடலோடே ஸ்பர்த்தித்துக் கிடந்தாற்போலே யிருக்கை; "கருணையங் கடல் துயின்றனன் கருங்கடல் நோக்கி" என்னும் படியிறே."

என்பது அப்பகுதி.

" மஞ்சுலாஞ் சோலை வண்டறை மாநீர்
மங்கையார் வாள்கலி கன்றி
செஞ்சொலா லெடுத்த தெய்வநன் மாலை
யிவைகொண்டு சிக்கெனத் தொண்டீர்!
துஞ்சும் போதழைமின் துயர்வரில் நினைமின்
துயரிலீர் சொல்லினு நன்றாம்
நஞ்சுதான் கண்டீர் நம்முடை வினைக்கு
நாராயணா வென்னும் நாமம்."

(பெரிய திருமொழி 1-1-10)

என்ற பாசுரத்து வியாக்கியானத்தில் "(வண்டறை) என்கிறது - சோலைக்கு விசேஷணமாகவுமாம்; மாநீர்க்கு விசேஷணமாகவுமாம் ஜலத்தினுடைய ரஸ்யதையாலே. 'ஈக்கள் வண்டோடு மொய்ப்ப' என்று ஆற்றுவரவுகளிலே சொல்லுவார்களாயிற்றுத் தமிழர்" என்பர் பெரிய வாச்சான் பிள்ளை. இங்கே குறித்திருப்பது,

" ஈக்கள் வண்டோடு மொய்ப்பவரம்பிகக்
தூக்கமே மிகுந்துட்டெளி வின்றியே
தேக்கெறிந்து வருதலிற் றீம்புனல்
வாக்கு தேனுகர் மாக்களை மானுமே"

(பாலகாண்டம். ஆற்றுப்படலம்.

என்ற இராமாவதாரப் பாட்டின் முதலடி. பேரறிவாளனாகிய கம்பரை ஆழ்வானாகப் போற்றி யுகந்தனர் சான்றோர்.

"தராதலத்தினுள்ள தமிழ்க்குற்ற மெல்லாம்
அராவும் அரமாயிற்றன்றே—இராவணன்மேல்
அம்பு நாட்டாழ்வானடி பணியும் ஆதித்தன்
**கம்ப நாட்டாழ்வான்** கவி"

என்ற பாடலை நோக்குக.

"நஞ்சடகோபனைப் பாடினையோவென்று நம்பெருமாள்
விஞ்சிய வாதரத்தாற் கேட்பக் கம்பன் விரைந்துரைத்த
செஞ்சொலந்தாதி கலித்துறை நூறுந் தெரியும் வண்ண
நெஞ்சடியேற்கருள் வேதந்தமிழ் செய்த நின்மலனே."

என்றும்;

"நாதனரங்கன யந்துரை யென்ன நற்கம் பனுன்றன்
பாதம் பரவிய பைந்தமிழ் நூறும் பரிவுடனே
யோதும்படி யெனக் குள்ளந்தனை யருளோதரிய
வேதந்தமிழ் செய்த மெய்ப்பொருளே யிதென் விண்ணப்பமே."

என்றும் உள்ள சிறப்புப்பாயிரப் பாடல்களால் "சடகோபரந்தாதி" பாடப் பெற்ற விவரம் நன்கு வெளிப்படை. இராமாவதாரம் அரங்கேற்றத் தொடங்குகையில் 'நஞ்சடகோபனைப் பாடினையோ?' என நம்பெருமாள் கேட்ப விரைந்து கம்பன் இதைப் பாடினனெனின் ஸ்ரீ ராமாயணப் பொருள் ஈதென்றுரைக்கவும் வேண்டுமோ? இந்நுட்ப மறிந்தே வேதசிரத் தேசிகனார் திருப்பாதுக மாமறை யாயிரம் பாடி திவ்ய தம்பதிகளின் பூர்ணவநுக்ரஹத்தைப் பெற்றனர்.

இவ்வந்தாதி பாடி வள்ளலாயினர் கம்ப நாடர். தேவிற் சிறந்த திருமாற்குத் தக்க தெய்வக் கவிஞன் பாவிற்சிறந்த திருவாய்மொழி பகர் பண்டிதனை நம்மாழ்வார். நாவிற் சிறந்த அம்மாறற்குத் தக்க நன்னுவலவன் பூவிற் சிறந்த **கம்ப நாட்டாழ்வான்.** இவ்வாழ்வான் பாடல்கள் நாலாயிரத்துள் சேர்ந்துள்ளன. சான்றோரே இதனுண்மையை அறிகுவர். மறைமுடித் தேசிகனார்,

"சிறிய மடற்பாட்டு முப்பத்தெட்டென்றும்"

எனத் தமது "பிரபந்தசாரம்" எனும் அரியநூலிற் குறித்துள்ளனர். இவ்விரண்டெவை என்பது நல்லறிஞரே நன்கு அறிகுவர்.

"ஓது மாமறை யோதிம வேதியன்
சோதி வாயுமிழ் செந்தமிழாரணப்

போதமாமட லோடிரு கண்ணிவாய்
ஓதுமோர் திருவாய்மையன் வாழியே. "

என்று "கம்பரிருபது" இயற்றிய நற்கேசவன் சீர்ப்பாடலிற் குறித்துக் கேசரி நற்ருட் பூசனையாற்றியிருத்தலே யுங்கண்டு களிக்க. தூப்புற் குல மணியின் "அபயப்ரதான ஸாரம்" கம்ப நாட்டாழ்வானின் இராமாவ தார ஸாரமே என்பது கசடறக் கற்றவர் துணிபு. மோட்டழகிய சிங்கர் சிரக்கம்பஞ் செய்யுமாறு பாடிய கம்பனின் கவித்திறனே நற்றிறன். இதனுலன்றோ,

"இம்பராற்பிணிக்கரு மிராமவேழஞ்சேர்
கம்பராம் புலவரைக் கருத்திருத்துவாம்."

என்ற "தனியன்" எழுந்தது.

நம்மாழ்வார் திருவவதாரஸ்தலமான திருநகரியில் அத்யாபக கோஷ்டியில் சந்திப்பு உத்ஸவத்தில் இன்றுகாறும் ஆழ்வாரந்தாதியி லுள்ள "அந்தணர்க்கோ" வென்ற பாசுரம் ஸேவிக்கப் பெற்று சாத்து முறை செய்து வருவது உலகப்ரஸித்தம். மேலும்,

"நம்பியைக்காண நங்கைக்காயிரம் நயனம் வேண்டும்
கொம்பினைக் காணுந்தோறுங் குரிசிற்கு மன்னதேயாம்
தம்பியைக் காண்மினென்பார் தவமுடைத்துலகமென்பார்
இம்பரிந்நகரிற்றந்த முனிவனை யிறைஞ்சுமென்பார்."

(பாலகாண்டம். கார்முகப்படலம். 43)

என்ற பாடலில் முன்னிரண்டடிகளில் திப்பிய தம்பதிகளையும், மூன்ரு வது அடியில் முத்திதருமெதிராசரையும், நான்காவது பாதத்தில் அன் பர் குலத்தோன்றலான தூப்புற் காவலனையும் குறிக்கொண்டுள்ளார் கவிச்சிரேட்டரான கம்பர் என்பது தெளியக்கற்ருர் தேற்றம். மதிவாணர் நோக்கிக் காண்க.

"ஆசைபற்றி யறையலுற்றேன்" என்றும்;
"* * அன்பெனு நறவமாந்தி
மூங்கையான் பேசலுற்ருனென்னயான் மொழியலுற்றேன்"
என்றும்

மஹாகவியே கூறுமாற்ருன், படிகொண்ட கீர்த்தி இராமாயணம் என்னும் பத்தி வெள்ளம் குடி கொண்ட கோயிலே கம்பநாடன் என்று கூறல் சற்றும் மிகையாது.

விபீடணனடைக்கலம் புகுந்ததைக் கவி,

"தருமமு ஞானமுந்தவமும் வேலியாய்
மருவரும் பெருமையும் பொறையும் வாயிலாய்க்

கருணையங் கோயிலு ளிருந்த கண்ணனை
அருணெறி யெய்திச் சென்றடி வணங்கினன்."

(உயுத்த காண்டம். விபீடணனடைக்கலப் படலம். 50)

என்கிறார். இராமாவதாரமே கம்பர் கோயில். ஆரருள் சுரக்கும் நீதியே அறம். அபயப்ரதானம் அளிக்கும் அய்யனே அறக்கடவுள்.

"ஆளையாவுனக்கமைந்தன மாருதமறைந்த
பூளையாயின கண்டனையின்று போய்ப் போர்க்கு
நாளைவாவென நல்கினனாகிளங்க முகின்
வாளை தாவுறுகோசலை நாடுடைவள்ளல்."

(உயுத்தகாண்டம். முதற்போர்ப் படலம். 256)

எனக் "கருணாகரன்" மறக்கருணை காட்டின செய்தியைச் செஞ்சொற் கவியிற் பாடிய கம்பரின் திறனை என்னென்றுரைப்பது.? இங்கு, "பேராண்மை" என்ற திருக்குறளுக்குப் பரிமேலழகியார், 'ஊராண்மை—உபகாரியாந்தன்மை; அஃதாவது இலங்கையர் வேந்தன் போரிடைத் தன் தானை முழுதும் படத், தமியனாயகப் பட்டானது தனிமை நோக்கி, அயோத்தியரிறை மேற்செல்லாது, "இன்று போய் நாளை நின் தானையோடுவா" என விட்டாற் போல்வது என்றெழுதிய விசேடவுரை குறிப்பிடத்தக்கது.

கோதாவரியை வருணிக்கின்ற இடத்தில்,

"புவியினுக்கணியாயான்ற பொருடந்து புலத்திற்றாகி
அவி யகத்துறைகடாங்கி யைந்திணை நெறி வளாவிச்
சவியுறத் தெளிந்து தண்ணென்றொழுக்கமுந் தழுவிச் சான்றோர்
கவியெனக் கிடந்த கோதாவரியினை வீரர்கண்டார்"

(ஆரணியகாண்டம், சூர்ப்பணகைப் படலம் 1)

எனக் கவி லக்ஷணத்தை ஆற்றின் மேலேற்றிக் கூறிய வாற்றானும், பம்பைப் பொய்கையை வர்ணிக்குங்கால்,

"கற்பகமனையவக் கவிஞர் காட்டிய
சொற்பொருளாமெனத் தோன்றல் சான்றது"

(கிட்கிந்தாகாண்டம். பம்பாநதிப் படலம். 6)

எனக் கூறியவகையானும், கம்பர் கருத்திற்கொண்ட கவிபாவம் இன்னதென்பது வெளிப்படை. அவர் கொண்ட விலக்கணத்துக்கு விலக்கியமாய் நிற்பதே விராமாவதாரம் என்பதோர் பேருண்மை.

**இராமாயண உள்ளுரையாவது :—**

இலங்கை சரீரம், இராவண கும்பகர்ணர்கள் அஹங்கார மமகாரங்கள். இந்திரஜித் முதலானோர் காமக்ரோதாதி துர்க்குணங்கள்.

சீதையைப் போன்றவன் சேதநன். ஆசார்யதுல்யன் அநுமான். சரீரமானது தசேந்த்ரியனை மநஸ்ஸால் அதிஷ்டிதம். சரீரம் போன்ற இலங்கை தசாநநனை இராவணனால் அதிஷ்டிதம், சரீரம் ஸம்ஸாரக் கடலிலும், இலங்கை ஸமுத்ர நடுவிலும் நிற்கின்றது. சீதை இலங்கையில் தளையப்பட்டு தைந்ய ஸ்திதியை அடைந்தாள். ஜீவன் சரீரத்தில் தளையப்பட்டு தீநஸ்திதியிலிருக்கின்றான். ஸ்ரீராம வ்ருத்தாந்தத்தை அநுமான் சீதைக்குச் சொன்ன வண்ணம் ஆசார்யர்கள் சேதநனுக்குத் தத்வஹித புருஷார்த்தங்களை உபதேசிக்கின்றனர்.

கல்வியிற் பெரிய கம்பநாட்டாழ்வானின் இராமாவதாரம், சடகோபரந்தாதி என்னும் தண்டமிழ்ச் சோலைகளிலுள்ள பூக்கொய்து தொடுத்த மாலையே இக் "**கம்பர்மாலை.**" இதிலடங்கிய பெரும் பகுதிகளும் பாடற்றொகையும் ஈண்டுக் காண்க.

| | | | பாடற்றொகை. |
|---|---|---|---|
| 1. | தோத்திரம் | ... | 98 |
| 2. | இராமாவதாரச் சுருக்கு | ... | 101 |
| 3. | *பெருமாள் புறப்பாடு | ... | 6 |
| 4. | கலம்பகம் | ... | 49 |
| 5. | இராமாவதாரத்திரு | ... | 30 |
| 6. | சடகோபரந்தாதி | ... | 12 |
| 7. | கம்பர் சீர்ப்பதிகம் | ... | 10 |
| 8. | கம்பரிருபது | ... | 22 |
| | | மொத்தம் | 328 |

மேற்குறித்தவற்றுள் ஈற்றிலுள்ள விரண்டும் முறையே இச்சங்கமஹா வித்துவானாலும், சங்கத்தலைவராலும் பாடப்பெற்றவை. அவற்றைத் தந்துதவிய அன்னவர்கட்கு எமது நன்றி என்றும் உரியதாகுக.

இராம பக்தரிற்றலைவரும், இச்சங்க உபதலைவரும், செந்தமிழார்வத்திருவுடையவரும், உபகாரசீலனும், சடகோபத் தொண்டனும், தொண்டர் சீர்பரவுந்தகவுடையவரும், அந்தணச் செல்வரும், சீரியரும் ஆகிய **ராவ்ஸாஹேப் ஆர். ராமஸ்வாமி அய்யங்காரவர்களே** இம்மாலை வெளியிட்டிற்குப் பூரணவுதவி புரிந்த வள்ளலார். அவரும் அவருற்றாருறவினரும் ஆயிரநாமச்சிங்கனின் பேரருளை நித்யமாகப் பெற்றின்புறுவாராக. பொங்கும் மங்கலம் எங்குந் தங்குக.

---

* தேசிகனார் "திருச்சின்னமாலை"க்கு மூலம் ஈதென்று கூறுப.

" இம்ப ரார்தொழு மின்னவன் யாவனே யென்னின்
உம்ப ராரினு முயர்நிலை மருவிய வுரவோன்
நம்பு கல்வியிற் பெரியவ னெனவிய னவிலும்
கம்ப னுமென வீறிய கடவுளு வலனே."

" சம்பநாடன் னுமைசெவி சாற்றுபூங்
கொம்பநாடன் கொழுநனி ராமப்பேர்
பம்பநாடழைக்குங் கதைபாச்செய்த
கம்பநாடன் கழறலையிற் கொள்வாம்."

ஸ்ரீரங்க விலாசம்,
திருவல்லிக்கேணி,
7—6—1941

ப. ரே. திருமலை அய்யங்கார்,
காரியதரிசி.

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நமஃ



## பயன்.

நாடியபொருள் கைகூடும் ஞானமும் புகழுமுண்டாம்
வீடியல் வழியதாக்கும் வேரியங்கமலை நோக்கும்
நீடிய வரக்கர் சேனை நீறுபட்டழியவாகை
சூடிய சிலையிராமன் றோள்வலி கூறுவோர்க்கே. 1

நன்மையுஞ் செல்வமு நாளு நல்குமே
தின்மையும் பாவமுஞ் சிதைந்துதேயுமே
சென்மமு மரணமு மின்றித் தீருமே
இம்மையே ராமவென்றிரண்டெழுத்தினால். 2

ஸ்ரீ:



# தோத்திரம்.

## நம்மாழ்வார் துதி.

தருகை நீண்ட தயாதன் றுன்றரும்
இருகை வேழத்திராக வன்றன்கதை
திருகை வேலைத் தரைமிசைச் செப்பிடக்
குருகை நாதன் குரைகழல் காப்பதே. 1

## அநுமான் துதி.

அஞ்சிலேயொன்று பெற்றுனஞ் சிலேயொன்றைத் தாவி
அஞ்சிலே யொன்றுராக வாரியற் காகவேகி
அஞ்சிலே யொன்று பெற்ற வணங்கைக் கண்டயலாரூரில்
அஞ்சிலேயொன்றை வைத்தான வனன்மையளித்துக் காப்பான். 2

## கலைமகள் துதி.

புத்தகம் படிகைமாலை குண்டிகை பொருள் சேர்ஞான
வித்தகந் தரித்த செங்கை விமலையை யமலைதன்னை
மொய்த்த கொந்தளக பாரமுகிழ் முலைத் தவளமேனி
மைத்தகு கருங்கட் செவ்வாயணங்கினை வணங்கல் செய்வாம். 3

ஸ்ரீ :

# கடவுள் வாழ்த்து.

உலகம் யாவையுந் தாமுள வாக்கலும்
நிலை பெறுத்தலு நீக்கலு நீங்கலா
அலகிலா விளையாட்டுடையாரவர்
தலைவர னவர்க்கே சரணுங்களே. 4

சிற்குணத்தர் தெரிவரு நன்னிலை
எற்குணர்த்தரி தெண்ணிய மூன்றனுள்
முற்குணத்தவரே முதலோரவர்
நற்குணக் கடலாடு தனன்றரோ. 5

ஆதியந்த மரியென யாவையும்
ஓதினு ரலகில்லன வுள்ளன
வேத மென்பன மெய்ந்நெறி நன்மையன்
பாதமல்லது பற்றிலர் பற்றிலார். 6

வானின்றிழிந்து வரம்பிகந்த மாபூதத்தின் வைப்பெங்கும்
ஊனுமுயிரு முணர்வும் போலுள்ளுழ்புறத்து முளனென்ப
கூனுஞ்சிறிய கோத்தாயுங் கொடுமையிழைப்பக் கோற்றுறந்து
கானுங் கடலுங் கடந்திமையோரிடுக் கண்காத்த கழல் வேந்தை. 7

பேதியாது நிமிர்பேதவுருவம் பிறழ்கிலா
ஓதியோதி யுணறுந்தொறு முணர்ச்சியுதவும்
வேதம் வேதியர் விரிஞ்சன் முதலோர் தெரிகிலா
ஆதிதேவரவ ரெம்மறி வினுக்கறிவரோ. 8

மூன்றுரு வெனக்குணமும்மையாமுதற்
றோன்றுரு வெவையுமம் முதலைச் சொல்லுதற்
கேன்றுரு வமைந்தவு மிடையினின்றவுஞ்
சான்றுரு வுணர்வினுக்கு வந்தாயினன். 9

(4) முதல் (6) வரை பாலகாண்டம். (7) அயோத்தியாகாண்டம்.
(8) ஆரணியகாண்டம். (9) கிட்கிந்தாகாண்டம்.

அலங்கலிற் றோன்றும் பொய்ம்மை யரவெனப் பூதமைந்தும்
விலங்கிய விகாரப்பாட்டின் வேறுபாடுற்ற வீக்கம்
கலங்குவ தெவரைக் கண்டா லவரென்பர் கைவிலேந்தி
இலங்கையிற் பொருதாரன்றே மறைகளுக் கிறுதியாவார். 10

ஒன்றே யென்னினொன்றேயாம் பலவென்றுரைக்கிற் பலவேயாம்
அன்றே யென்னினன்றேயா மாமே யென்னினாமேயாம்
இன்றே யென்னினின்றே யாமிலதென்றுரைக் கினிலதேயாம்
நன்றே நம்பி குடிவாழ்க்கை நமக்கிங்கென்னோ பிழைப்பம்மா. 11

வெள்ளியங்கிரியை மீதே வேரொடு மெடுத்தவீரக்
கள்ளவன் புயநாலைந்துங் கனகமாமவுலி பத்தும்
துள்ளியம் புவிமேல் வீழ வொருகணை தொடுத்துவிட்ட
வள்ளலம் புயமேயன்ன மலரடி வணக்கஞ் செய்வாம். 12

## விராதன் துதி.

வேதங்களறைகின்ற வுலகெங்கும் விரிந்தனவுன்
பாதங்களிவை யென்னிற் படிவங்களெப்படியோ
வோதங்கொள் கடலன்றி பொன்றி னொடொன்றொவ்வாப்
பூதங் கடொறு முறைந்தாலவையுன்னைப் பொறுக்குமோ. 13

கடுத்த கராங்கதுவ நிமிர்கையெடுத்து மெய்கலங்கி
யுடுத்ததிசையனைத்தினுஞ் சென்றொலி கொள்ளவுறுதுயரா
லடுத்த பெருந்தனி மூலத்தரும் பரமே பரமேயென்
றெடுத்தொரு வாரண மழைப்ப நீயோவன் றேனென்றாய். 14

புறங்காண வகங்காணப் பொது முகத்தினருனோக்க
மிறங்காத தாமரைக்க ணெம் பெருமா அனியம் புதியா
லறங்காத்தற்குனக் கொருவராரு மொருதுணையின்றிக்
கறங்காகு மெனத்திரிய நீயேயோ கடவாய்தான். 15

---

(10) சுந்தரகாண்டம்.

(11) உயுத்தகாண்டம். (12) உத்தரகாண்டம்.

(13) முதல் (26) வரை இராமாவதாரம். ஆரணியகாண்டம். விராதன் வதைப் படலம்.

துறப்பதே தொழிலாகத் தோன்றினோர் தோன்றியக்கால்
மறப்பரோ தம்மை யது வன்றாகின் மற்றவர்போற்
பிறப்பரோ வெவர்க்குந்தாம் பெற்ற பதம் பெறலரிதோ
விறப்பதே பிறப்பதே யெனும்விளையாட் டினிதுகந்தோய். 16

பணிநின்ற பெரும் பிறவிக்கடல் கடக்கும்படிபற்றி
நணிநின்ற சமயத் தோரெல்லாரு நன்றென்னத்
தனிநின்ற தத்துவத்தின்றகை மூர்த்தி நீயாகி
னினி நின்ற முதற்றேவ ரென்கொண்டென் செய்வாரே. 17

ஓயாத மலரயனை முதலாக வுளராகி
மாயாத வானவர்க்கு மற்றொழிந்த மன்னுயிர்க்கு
நீயாகின் முதற்றாதை நெறி முறையாலீன்றெடுத்த
தாயாவார் யாவரே தருமத்தின் றனிமூர்த்தி. 18

நீயாதிபரம்பரமு நின்னவேயுலகங்க
ளாயாதசமயமு நின்னடியவே யயலில்லை
தீயாரினொளித்தியால் வெளி நின்றாற் றீங்குண்டோ
வீயாத பெருமாயை விளையாட்டும் வேண்டுமோ. 19

தாய்தன்னை யறியாத கன்றில்லை தன்கன்றை
யாயுமறியு முலகின்றா யாகினைய
நீயறிதி யெப்பொருளு மவையுன்னை நிலையறியா
மாயையிது வென்கொலோ வாராதே வரவல்லாய். 20

பன்னலா மென்றுலகம் பலபலவு நினையுமா
லுன்னலாற் பெருந்தெய்வ முயர்ந்துளோ ரொழுக்கன்றே
யன்னவூர் தியைமுதலா மந்தணர்மாட் டருந்தெய்வ
நின்னலாவில்லாமை நெறிநின்றார் நினையாரோ. 21

பொருவரிய சமயங்கள் புகல்கின்ற புத்தேளி
ரிருவினையுமுடையார் போலருந்தவ நின்றியற்றுவார்
திருவுறையுமணி மார்ப நினக்கென்னை செயற்பால
வொரு வினையுமில்லார் போலுறங்குதி யாலுறங்காதாய். 22

அறவாகிச் சுமத்தியால யிலெயிற்றி னேந்துதியா
லொருவாயின் விழுங்குதியா லோரடியாலொளித்தியா
றிருவான நிலமகளை யிஃதறிந்தாற் சீறாளோ
மருவாருந்து ழாயலங்கன் மணிமார்பின் வைகுவாள். 23

மெய்யைத்தான் சிறிதுணர்ந்து நீ விதித்த மன்னுயிர்க
ளுய்யத்தானாகாதோ வுனக்கென்ன குறையுண்டோ
வய்யத்தார் வானத்தார் மழுவாளிக் கன்றளித்த
வய்யத்தாற் சிறிதையந் தவிர்ந்தாரு முளரையா. 24

அன்னமா யருமறைக ளறைந்தாய் நீ யவையுன்னை
முன்னமா ரோதுவித்தா ரெல்லாரு முடிந்தாரோ
பின்னமாயொன்றுதல் பிரிந்தேயோ பிரியாதோ
வென்னை மாமாய மிவை யேனமாய் மண்ணிடந்தாய். 25

ஒப்பிறையும் பெறலரிய வொருவாமுன் னுவந்துறைபு
மப்புறைபு டுறந்தடியே னருந்தவத்தா லனுகுறலா
லிப்பிறவிக் கடல்கடந்தே னினிப்பிறவே னிருவினையுந்
துப்புறழு நீர்த்த சுடர்த் திருவடியாற் றுடைத்தாய் நீ. 26

## இந்திரன் துதி.

தோய்ந்தும் பொருளனைத்துந் தோயாது நின்ற
 சுடரே தொடக்கறுத்தோர் சுற்றமே பற்றி
நீய்ந்தவரிய நெடுங்கருணைக் கெல்லா
 நிலயமே வேதநெறி முறையினேடி
யாய்ந்த வுணர்வினு ணர்வே பகையா
 லலைப்புண்டடியே மடிபோற்ற வந்நா
ளீந்தவரமுதவ வெய்தினேயே யெந்தா
 யிரு நிலத்தவோ நின்னிணை யடித்தாமரைதாம். 27

மேவாதவரில்லை மேவினருமில்லை
 வெளியோடிருளில்லை மேல் கீழுமில்லை
மூவாமையில்லை மூத்தமையுமில்லை
 முதலிடையோடீறில்லை முன்னொடு பின்னில்லை
தேவா விங்கிவ்வோ நீ சென்ற நிலை யென்றாற்
 சிலையேந்தி வந்தெம்மைச் சேவடிகளேவக்
காவா தொழியிற் பழிபெரிதோ வன்றேற்
 கருங்கடலிற் கண்வளராய் கைம்மாறு முண்டோ ? 28

---

(27) முதல் (31) வரை இராமாவதாரம். ஆரணியகாண்டம். சரபங்கர் பிறப்பு நீங்குபடலம்.

நாழி நவைதீரு லகெலாமாக
    நளினத்து நீதந்த நான்முகனார் தாமே
ஊழி பலபலவு நின்ற ளந்தாலொன்று
    முலவாப் பெருங்குணத்த வுத்தமனே மேனா
டாழிதரையாகத் தண்டயிர் நீராகத்
    தடவரையே மத்தாகத் தாமரைக்கை நோவ
வாழி கடைந்தமுத மெங்களுக்கே யீந்தா
    யவுணர் கடா நின்னடிமை யல்லாமையுண்டோ. 29

ஒன்றாகி மூலத் துருவம் பலவாகி
    யுணர்வு முயிரும் பிறிதாகி யூழி
சென்றாசறுங் காலத்தந் நிலையதாகித்
    திறத்துலகந் தானாகிச் செஞ்சவே நின்ற
நன்றாய ஞானத்தனிக் கொழுந்தே நங்க
    ணவைதீர்க்கு நாயகமே நல்வினையே நோக்கி
நின்றாரைக் காத்தி யயற்பேரைக்காய்தி
    நிலையில்லாத் தீவினையு நீதந்த தன்றே. 30

வல்லை வரம்பில்லாத மாயவினை தன்னான்
    மயங்கினரோடெய்தி மதிமயங்கி மேனா
ளல்லை யிறையவனி யாதியெனப்பேதுற்
    றல மருவே முன்னை யறப்பயனுண்டாக
வெல்லை வலயங்க ளின்னுழை யென்றந்நா
    ளெரியோனைத் தீண்டி யெழுவவெனநின்ற
தொல்லை முதன்முனிவர் சூளுற்றபோதே
    தொகை நின்ற வையந்துடைத்திலையோ வெந்தாய். 31

## கவந்தன் துதி.

ஈன்றவனே வெப்பொருளுமெல்லை தீர்நல்லறத்தின்
சான்றவனே தேவர் தவத்தின் றனிப்பயனே
மூன்று கவடாய் முளைத்தெழுந்த மூலமோ
தோன்றி யிருவினையேன் சாபத்திடர் துடைத்தாய். 32

(32) முதல் (40) வரை இராமாவதாரம். ஆரணிய காண்டம். கவந்தப் படலம்.

மூலமே யில்லாமுதல்வனே நீ முயலுங்
கோலமே யார்க்குந்தெரிவரிய கொள்கைத்தா
லாலமோ வாலினலையோ வடைகிடந்த
பாலனோ வாதிப்பரனோ பகராயே. 33

காண்பார்க்குங்காணப் படுபொருட்குங் கண்ணாகிப்
பூண்பாய்போ னிற்றியால் யாதொன்றும் பூணாதாய்
மாண்பாலுலகை வயிற்றொளித்து வாங்குதியா
லாண்பாலோ பெண்பாலோ வப்பாலோ வெப்பாலோ. 34

ஆதிப்பிரமனு நீயாதிப் பரமனுநீ
யோதியுறு பொருளுக்கப் பாலுண்டாயினுநீ
சோதிச்சுடர்ப் பிழம்பு நீயென்று சொல்லுகின்ற
வேதமுறை செய்தால் வெள்காரோ வேறுள்ளார். 35

எண்டிசை யுந்திண்சுவரா வேழேழ் நிலைவகுத்த
வண்டப் பெருங்கோயிற் கெல்லா மழகுடைய
மண்டலங்கண் மூன்றின்மே லென்றுமலராத
புண்டரிக மொட்டின் பொகுட்டே புரையம்மா. 36

மண்பாலமரர் வரம்பாருங் காணாத
வெண்பாலுயர்ந்த வெரியோங்கு நல்வேள்வி
யுண்பாய் நீயூட்டுவாய் நீயிரண்டு மொக்கின்ற
பண்பாரறிவார் பகராய் பரமேட்டி. 37

நிற்குநெடு நீத்த நீரின் முளைத்தெழுந்த
மொக்குளைபோல முரணிற்ற வண்டங்கள்
வொக்க வுயர்ந்துனுளே தோன்றி யொளிக்கின்ற
பக்க மறிதற் கெளிதோ பரம்பரனே. 38

நின்செய்கை கண்டு நினைந்தனவோ நீண்மறைக
ளுன்செய்கை யன்னவைதான் சொன்ன வொழுக்கினவோ
வென்செய்தேன் முன்னமறஞ் செய்கை யெய்தினார்
பின்செல்வதில்லாப் பெருஞ்செல்வ நீ தந்தாய். 39

மாயப்பிறவி மயனீக்கி மாசிலாக்
காயத்தை நல்கித்துயரின் கரையேற்றிப்
பேயொத்தேன் பேதைப் பிணக் கறுத்த வெம்பெருமா
னையொத்தே னென்ன நலனிழைத்தே னென்றான். 40

## சுக்கிரீவன் துதி.

வய்யநீ வானுநீ மற்றுநீ மலரின்மே
லய்யநீ யாழிநீ யாழிவாழமலனீ
செய்ததீவினை தெறுந்தேவுநீ நாயினே
னுய்யவந்துதவினா யுலகமுண்டுதவினாய். 41

என்னெனக் கரியதெப் பொருளுமெற் கெளிதலா
லுன்னையித்தலை விடுத் துதவினார் விதியினா
ரன்னை யொப்புடைய வுன்னடியருக் கடியன் யான்
மன்னவர்க்கரச வென்றுரை செய்தான் வசையிலான். 42

## வாலி துதி.

ஏவு கூர்வாளி யாலெய்து நாயடியனே
னாவிபோம் வேலை வாயறிவு தந்தருளினாய்
மூவர்நீ முதல்வனீ முற்றுநீ மற்றுநீ
பாவநீ தருமநீ பகையுநீ யுறவுநீ. 43

புரமெலாமெரி செய்தோன் முதலினோர் பொருவிலா
வரமெலா முருவியென் வசையிலாவலிமைசா
லுரமெலா முருவியென் னுயிரெலா நுகரு நின்
சரமலாற் பிறிதுவே றுளதரோ தருமமே. 44

(41), (42) இராமாவதாரம். கிட்கிந்தாகாண்டம். மராமரப்படலம்

(43) முதல் (47) வரை. இராமாவதாரம். கிட்கிந்தாகாண்டம். வாலிவதைப் படலம்.

மாவலச்சூலியார் வாழ்த்துநர்க்குயர்வரம்
ஓவலற்றுதவனின் னொருதனிப் பெயரியம்
பாவலிப் புடைமையா லாகுமப்பொருளையாத்
தேவ நிற்கண்ட வெற்கரிதென்னே தேரினே. 45

யாவருமெவையுமா யிருதுவும் பயனுமாய்ப்
பூவுநல்வெறியுமொத் தொருவரும் பொதுமையா
யாவனியாவதென் றறிவினாருளினர்
தாவரும்பதமெனக் கருமைபோதனிமையோ. 46

உண்டெனு ந்தருமமே யுருவமா யுடையநிற்
கண்டுகொண் டேனினிக் காணவென் கடவென்னே
பண்டொடின்றளவுமே யென்பெரும் பழவினைத்
தண்டமே யடியனேற் குறுபதந் தருவதே. 47

## பிரகலாதாழ்வான் துதி.

அடியாரடியே னெனுமார் வமலா
லொடியாவலி யானுடையே னுளனோ
கொடியாய் குறியாய் குணமேது மிலாய்
நெடியாயடியேனிலை நேர்குதியோ. 48

கள்ளந்திரிவாரவர் கைதவநீ
உள்ளந்தெரியாதவுனக்குளவோ
துள்ளும் பொறியின்னிலை சோதனைதான்
வெள்ளந்தரு மின்னமுதே விதியோ. 49

வருநான்முகனைம் முகன் வானவர்கோன்
றிரு நான்மறையின் னெறியே திரிவார்
பெரு நாடெரிகின்றி லர்பேதைமையே
னொருநாளுனை யெங்ஙன முள்ளுவனே. 50

(48) முதல் (57) வரை இராமாவதாரம். உயுத்தகாண்டம். இரணியன் வதைப் படலம்.

செய்யாதனவோவிலை தீவினைதான்
பொய்யாதன வந்து புணர்ந்திடுமால்
மெய்யே யுயிர்தீர்வதோர் மேல்வினைநீ
அய்யாவொரு நாளுமயர்த்தனையோ. 51

ஆயப்பெறு நன்னெறி தம்மறிவென்
றேயப்பெறு மீசர்களெண்ணிலரால்
நீயப்புற நிற்க நினைக்கிலர்நின்
மாயப் பொறிபுக்கு மயங்குவரால். 52

தாமேதனி நாயகரா யெவையும்
போமே பொருளொன்ற புராதனர்தாம்
யாமே பரமென்றன ரென்றவர்க்
காமேபிறர் நின்னலதாகுவரே. 53

ஆதிப்பரமா மெனிலன்றெனலா
மோதப்பெரு நூல்களுலப்பிலவால்
பேதிப்பன நீயவை பேர்கிலையால்
வேதப்பொருளே விளையாடுதியோ. 54

அம்போருக னாரண னறியா
ரெம்போலிய ரெண்ணிடி னென்பலவாக்
கொம்போடடை பூக்கனி காயெனினும்
வம்போ மரமொன்றெனும் வாசகமே. 55

நின்னிற் பிறிதாய் நிலையிற்றிரியா
தன்னிற் பிறிவாயின தானறமும்
உன்னிற் பிறிதாயினவோ வுலகம்
பொன்னிற் பிறிதாகிய பொற்கலனே. 56

தாயதநதை யெனுந்தகைவந்தனைதான
நீய்தந்தனை நீயுறு நெஞ்சினனுன்
நோய்தந்தவனே நுவறீர்வு மெனு
வாய்தந்தன சொல்லி வணங்கினனுல். 57

## பிரமன் துதி.

தன்னைப்படைத்ததுவுந்தானே யெனுந்தன்மை
பின்னைப் படைத்ததுவே காட்டும் பெரும்பெருமை
உன்னைப்படைத்தாய் நீ யென்றுலுயிர் படைப்பா
னென்னைப் படைத்தாய் நீ யெனுமிதுவு மெற்றேமோ. 58

பல்லாயிரகோடியண்டம் பனிக்கடலுள்
நில்லாத மொக்குளெனத் தோன்று மானின்னுழையே
யெல்லா வுருவமுமாய் நின்றக் காவிவ்வுருவம்
வல்லே படைத்தால் வரம் பின்மை வாராதோ. 59

பேரையொரு பொருட்கே பல்வகையாற்பேர்த்தெண்ணும்
தாரை நிலையை தமியை பிறரில்லை
யாரைப் படைக்கின்ற தியாரையளிக்கின்ற
தியாரைத் துடைக்கின்ற தையாவறியேமால். 60

நின்னுளேயென்னை நிருமித்தாய் நீயல்லா
தென்னுளே யெப்பொருளும் யாவரையும் யானின்றேன்
பின்னிலேன் முன்னிலே னெந்தை பெருமானே
பொன்னுளே தோன்றியதோர் பொற்கலனே போல்கின்றேன். 61

## வருணன் துதி.

ஆழிநீ யனலு நீயே யல்லவை யெல்லா நீயே
யூழி நீ யுலகு நீயே யவற்றுறை யுயிரு நீயே
வாழியாயடியேனின்னை மறப்பனோவயங்கு செந்தீச்
சூழுறவுலைந்து போனேன் காத்தருள் சுருதி மூர்த்தி. 62

காட்டுவாயுலகங் காட்டிக் காத்தவை கடையிற்செந்தீ
யூட்டுவாயுண்பாய் நீயே யுனக்கு மொண்ணுததுண்டோ
தீட்டுவான் பகழியொன்று லுலகங்களெவையுந் தீய
வீட்டுவாய் நிலையினுயேற்கித்தனை வேண்டுமோ தான். 63

(58) முதல் (61) வரை இராமாவதாரம். உயுத்த காண்டம். இரணியன்வதைப் படலம்.

(62) முதல் (67) வரை ஷை ஷை வருணனை வழிவேண்டு படலம்.

சண்டவான் கிரணவாளாற்றயங்கிருட் காடு சாய்க்கு
மண்டலத்துறையுஞ் சோதிவள்ளலே மறையின் வாழ்வே
பண்டைநான் முகனே யாதிச்சராசரத்துள்ள பள்ளப்
புண்டரீகத்து வைகும் புராதனு போற்றிபோற்றி. 64

கள்ளமாயுலகங்கொள்ளுங் கருணையான் மறையிற் கூறு
மெள்ளலாகாத மூலத்தி யாதுக்கு முதலாயுள்ள
வள்ளலே காத்தியென்ற மாகரி வருத்தந்தீரப்
புள்ளின்மேல் வந்து தோன்றும் புராதனு போற்றிபோற்றி. 65

அன்னை நீ யத்தனீயே யல்லவையெல்லா நீயே
பின்னு நீ முன்னு நீயே பேறு நீ யிகழ்வு நீயே
யென்னை நீ யிகழ்ந்ததென்ற தெஞ்ஞனை யீசனுய
வுன்னை நீ யுணராய் நாயே னெங்ஙன முணர்வேனுன்னை. 66

பாயிருள் சிக்குந்தெய்வப் பரிதியைப் பழிக்கு மாலே
மாயிருங் கரத்தான் மண்மேலடியுறை யாகவைத்துத்
தீயனசிறியோர் செய்தாற் பொறுப்பது பெரியோர் மேற்றே
ஆயிர நாமத்தையா சரணமென்றடியில் வீழ்ந்தான். 67

## பெரிய திருவடி துதி.

தேவாதிதேவர் பலராலு முந்து
திருநாமமோது செயலோய்
மூவாத நாளு முலகேழொடேழு
மாசாளுமேன்மை முதல்வா
மேவாத வின்ப மவை மேவிமேவ
நெடுவீடு காட்ட முடியாய்
ஆவாய் வருந்தியழிவாய் கொலாரிவ்
வதிரேகமாயை யறிவார். 68

(68) முதல் (78) வரை இராமாவதாரம். உயுத்தகாண்டம். நாக பாசப்படலம்.

எழுவாயெவர்க்கு முதலாகியீறு
டிடையாகி யெங்கு முளையாய்
வழுவாதவர்க்கும் வரமீயவல்லை
யவரால் வரங்கள் பெறுவாய்
தொழுவாயுணர்ச்சி தொடாததன்மை
யுருவாய் மறைந்துதுயரா
லழுவாயொருத்தனுளை போலுமாரிவ்
வதிரேக மாயையறிவார். 69

உன்னொக்கவைத்த விருவர்க்குமொத்தி
யொருவர்க்கு முண்மையுரையாய்
முன்னொக்க நிற்றியுல கொக்கவொத்தி
முடிவொக்கி னொன்று முடியாய்
என்னொக்கு மின்னசெயலோ விதென்னி
விருளொக்கு மென்று விடியா
யக்கொப்பமேகொல் பிறிதேகொலாரிவ்
வதிரேகமாயை யறிவார். 70

வாணுளளித்தி முடியாமனீதி
வருநாளுநிற்றி மறையோய்
பேணுயுணக்கொர் பொருள்வேண்டுமென்று
பெறுவானருத்தி பிழையா
யூணுயுயிர்க்கு முயிராகி நிற்றி
யுணர்வாய பெண்ணினுருவா
யாணுகி மற்றுமலியாகி யாரிவ்
வதிரேக மாயை யறிவார். 71

தானந்தமில்லை பலவென்னு மொன்று
தனியென்னு மொன்று தவிரா
ஞானந் தொடர்ந்த சுடரென்னு மொன்று
நயனந் தொடர்ந்த வொளியால்
வானந் தொடர்ந்த பதமென்னு முன்னை
மறைநாலின் வந்த முறையா
லானந்த மென்னுமய லென்னுமாரிவ்
வதிரேகமாயை யறிவார். 72

மீளாதவேத முடிவின் கணின்னை
மெய்யாக மெய்யி னினையுங்
கேளாதவென்று பிறவென்று சொன்ன
கெடுவார்கள் சொன்ன கடவான்
மாளாதநீதி யிகழாமைநீங்க
ணபிமானமில்லை வறியோ
ராளாயும் வாழ்தி யரசாள் தியாரிவ்
வதிரேகமாயை யறிவார். 73

சொல்லொன்றுரைத்தி பொருளாதிதூய
மறையுந் துறந்து திரிவாய்
வில்லொன்றெடுத்தி சரமொன்றெடுத்தி
மிளிர்சங்க மங்கை யுடையாய்
கொல்லென்றுரைத்தி கொலையுண்டு நிற்றி
கொடியா யுன் மாயை யறியே
னல்லென்று நிற்றி பகலாதி யாரிவ்
வதிரேக மாயை யறிவார். 74

மறந்தாயுமொத்தி மறவாயுமொத்தி
மயலாரும் யானு மறியேம்
துறந்தாயுமொத்தி துறவாயுமொத்தி
யொருதன்மை சொல்லவரியாய்
பிறந்தாயு மொத்திபிற வாயுமொத்தி
பிறவாமனல்கு பெரியோ
யறந்தானிறுத் தலரிதாகவாரிவ்
வதிரேக மாயை யறிவார். 75

வினைவர்க்கமுற்று முடனேபடைத்தி
யவையெய்தி யென்றும் விளையா
நினைவர்க்கு நெஞ்சினூறு காமமுற்றி
யறியாமை நிற்றி மனமா
முனைவர்க்குமொத்தி யமரர்க்குமொத்தி
முழுமூடரென்றிம் முதலோ
ரனைவர்க்குமொத்தி யறியாமையாரிவ்
வதிரேகமாயை யறிவார். 76

எறிந்தாருமேறு படுவாருமின்ன
பொருள் கண்டிரங்குபவரும்
செறிந்தாரினுண்மை யெனலாயதன்மை
தெரிகின்ற துன்னதிடையே
பிறிந்தார் பிறிந்த பொருளோடுபோதி
பிறியாது நிற்றி பெரியோ
யறிந்தாரறிந்த பொருளாதியாரிவ்
வதிரேகமாயை யறிவார். 77

பேராயிரங்களுடையாய் பிறந்த
பொறுடோறு நிற்றி பிரியாய்
தீராய் பிரிந்து திரிவாய் திறந்தொ
றவை தேறுமென்று தெளியாய்
கூராழியங்கை யுடையாய் திரண்டொ
ருருவாதி கோடலுரிபோ
லாராயினேது மிலையாதியாரிவ்
வதிரேகமாயை யறிவார். 78

## விண்ணோர் துதி.

உன்னையுள்ள படியறியே
முலகையுள்ள திறமுள்ளேம்
பின்னையறியே முன்னறியே
மிடையுமறியேம் பிறழாம
னின்னைவணங்கி நீவகுத்த
நெறியினிற்கு மதுவல்லா
லென்னையடியேஞ் செயற்பால
வின்பதுன்ப மில்லோனே. 79

அரக்கர்குலத்தை வேராறுத்தெம்
மல்லனீக்கிய ருளாயென்
றிரக்கவெம் மேற்கருணையினு
லியையாவுருவ மிஃதெய்திப்

(79) முதல் (85) வரை இராமாவதாரம், உயுத்த காண்டம், பிரமாத்திரப் படலம்.

புரக்குமன்னர் குடிப்பிறந்து
போந்தாயறத்தைப் பொறை தீர்ப்பான்
கரக்கநின்றே நெடுமாய
மெமக்குங் காட்டக் கடவாயோ. 80

ஈன்றெம் மிடுக்கண் டுடைத்தளிப்பா
னிரங்கி யரசரிற் பிறந்தாய்
மூன்று முலகந்துயர் தீர்த்தி
யென்னுமாசை முயல்கின்றே
மென்று மறந்தே மவனல்லன்
மனிதனென்றே யிது மாயம்
போன்றதில்லை யாளுடையாய்
பொய்யும் புகலப்புக்காயோ. 81

அண்டம் பலவு மனைத்துயிரு
மகத்தும் புறத்து முளவாக்கி
யுண்டுமிழ்ந்து மளந்திடந்து
முள்ளும் புறத்து முளையாகிக்
கொண்டு சிலம்பி தன் வாயிற்
கூர்நூ லியையக் கூறியற்றிப்
பண்டு மின்று மமைக்கின்ற
படியை யொருவாய் பரமேட்டி. 82

துன்பவினை யாட்டிதுவேயு
முன்னைத் துன்பந் தொடர் பின்மை
இன்ப வினையாட்டாமெனினு
மறியாதேமுக்கிடருற்று
லன்பு வினையு மருள் வினையு
மறிவு வினையு மவையெல்லா
முன்பு பின்பு நடுவில்லாய்
முடித்தாலன்றி முடியாயே. 83

வருவாய்போல வாராதாய்
வந்தாயென்று மனங்களிப்ப
வெருவா திருந்தே நீ யிடையே
துன்பம் விளைக்க மெலிகின்றேம்

கருவாயளிக்கும் களைகண்ணே
நீயே யிதனைக்களை யாயேற்
றிருவாழ் மார்ப நின்மாயை
யெம்மாற் றீர்க்கத் தீருமோ. 84

அம்பரீடற் கருளியது
மயனார் மகனார்க்களித்ததுவு
மெம்பிரானே யெமக்கின்று
பயந்தாயென்றே யேமுறுவேம்
வெம்புதுயரா நீ யுழக்க
வெளி காணாது மெலிகின்றேந்
தம்பி துணைவ நீ யிதனைத்
தவிர்த் தெம் முணர்வைத் தாராயோ. 85

## சதுமுகன் துதி.

மன்னர் தொல்குலத்தவரி னத்துணை யொருமனித்த
னென்ன வுன்னலை யுன்னை நீ யிராம கேளிதனைச்
சொன்ன நான்மறைத் துணிவினிற் றுணிந்தமெய்த்துணிவு
நின்னலாதில்லை நின்னில் வேறுளதிலை நெடியோய். 86

பகுதியென்றுளதி யாதினும் பழையது பயந்த
விகுதியால் வந்த விளைவு மற்றதற்கு மேனின்ற
புகுதியாவர்க்கு மறியவப் புருடனு நீயும்
மிகுதியுன் பெருமாயையினுல் வந்த வீக்கம். 87

முன்பு பின்பிரு புடையெனுங் குணிப்பரு முறைமைத்
தன்பெருந் தன்மை தான்றெரி மறைகளின் றலைகள்
மன்பெரும் பரமார்த்த மென்றுரைக்கின்ற மாற்றம்
அன்ப நின்னை யல்லான் மற்றிங்கி யாரையு மறையா. 88

(86) முதல் (98) வரை இராமாவதாரம். உயுத்தகாண்டம். மீட்சிப் படலம்.

எனக்கு மெண்வகையொருவற்கு மிமையவர்க்கிறைவன்
றனக்கும் பல்பெரு முனிவர்க்குமுயிருடன் றழீ இய
வனைத்தினுக்கு நீயே பரமென்பதை யறிந்தார்
வினைத்துவக்குடை வீட்டருந்தளை நின்று மீள்வார். 89

என்னைத்தான் முதலாகிய வுருவங்களெவைவு
முன்னைத்தாய் தந்தையெனும் பெருமாயையின் மூழ்கித்
தன்னைத் தானறியாமையிற் சலிப்பவச்சலந்தீர்ந்
துன்னைத் தாதையென்றுணர்குவ முத்தி வித்தொழிந்த. 90

ஐயஞ் சாகியதத்துவந் தெரிந்தறிந்த வற்றின்
மெய்யெஞ்சாவகைமேனின்ற நினக்குமேல்யாதும்
பொய்யெஞ்சாவில தென்னு மீதருமறை புகலும்
வய்யஞ் சான்றினிச் சான்றுக்குஞ் சான்றிலை வழக்கால். 91

அளவையாலளந்தா மனமொறன்றறிவுறு மமைந்தி
உளவையாவையு முனக்கில்லை யுபநிடத்துனது
களவையாய்ந்துறத்தெளிந்தில தாயினுங் கண்ணுற்
றுளவையாய் முடியாயுளை நீயெனத்துணியும். 92

கரணமொன்றுள துன்னை வந்தறிவு காணுமே
யரண மல்லவர்க்கிவை கடந்தறிவரிதாக
மரணந்தோற்ற மென்றி வற்றிடை மயங்குப வவற்றுன்
சரண மல்லதோர் சரணில்லை யன்னவை தவிர்ப்பான். 93

தோற்றமென்ப தொன்றுனக்கில்லை நின்கணேதோற்று
மாற்றல்சான் முதற்பகுதி மற்றதனுளாம் பண்பால்
காற்றை முன்னுடைப் பூதங்களவை சென்று கடைக்கால்
வீற்று வீற்றுற்று வீவுறு நீயென்றும் விளியாய். 94

மின்னைக்காட்டுதல் போல்வந்து விளியு மெய்யுலகம்
தன்னைக் காட்டவுந் தருமத்தை நாட்டவுந்தனியே
யென்னைக்காட்டுதி யிறுதியுங் காட்டுதி யெனக்கு
முன்னைக் காட்டிலை யொளிக்கினுமிலை மறையுரையால். 95

என்னுருக்கொடிவ் வுலகினை யீனுதியிடையே
யுன்னுருக்கொடு புகுந்துநின்றோம்புதி யுமையோன்
றன்னுருக்கொடு துடைத்திமற்றிது தனியருக்கன்
முன்னுருக்கொடு பகற்செயுந்தரத்தது முதலோய். 96

திருக்குவான்மலி செல்வத்துச் செருக்குவேந்திறத்துத்
தருக்குமாய் வறத்தானவரரக்கர் வெஞ்சமரி
லிரிக்கமாழ்கி நொந்துனைப் புகல்யாம் புகலியையாக்
கருக்குளாய் வந்து தோற்றுதி யீங்கிதுகடனே. 97

ஓங்காரப் பொருடேறு வோர்தாமுன்னை யுணர்வோ
ரோங்காரப் பொருளென்றுணர்ந் திருவினையுகுப்போ
ரோங்காரப் பொருளாமன்றென் றாழிசென்றுலு
மோங்காரப் பொருளே பொருளென் கிலாவுரவோர். 98

ஸ்ரீ:

# *இராமாவதாரச் சுருக்கு.

## காப்பு.

ஞானநாயகனான் மறை நாயகனளினத்
தேன நாயகன் றிருப்பத நதிபொதி செனியன்
ஆன நாயக னம்பிகைக் கருடிருக்கதைக்கோர்
சேனை நாயகனடியிணை சிறந்த நற்றுணையே.

## நூல்.

### பாலகாண்டம்.

நாடுகோசல நாடு மானதி புனற்சரயு
ஆடுதிண் கொடி யயோத்திமா நகரதற் கிறைவன்
தேடுவண் புகழ்த் தசரதன் றேவியர் முதன்மை
சூடுகோசலை கைகேசி சுமித்திரை யென்பார். 1

மற்றுந் தேவியரறு பதினாயிர மடவார்
சொற்ற மன்னவன் சுடர்புகழ் வேள்வியைத் தொடங்கிப்
பெற்ற மைந்தர் பேர் பிறங்கு வேலி ராகவன் பரதன்
எற்று நீள்புயத்திலக்குவன் சத்துருக்கினனே. 2

*உத்தரகாண்டம். அசுவமேத யாகப்படலம்.

அன்ன மன்னவனரியணை மீது வீற்றிருந்தான்
இன்ன மாநிலம் படைப்ப னென்றவனியல் வேள்விக்
குன்னன் மைந்தரி லிராமனைத் தருதி யென்றுரைத்தான்
மன்னர் மன்னவன் மறுத்தனன் வசிட்டனீ துரைத்தான். 3

மறுத்தியன்றென வுரைத்தலு மன்னர்கோன் முனியைப்
பொறுத்தி யென்றவன் பொன்னடி சென்னியிற் புனையா
உறுத்திமைந்தரை யளித்தலு முவந்துமாமுனியும்
கறுத்த செம்மலுந் தம்பியுங் காடுசென்றடைந்தார். 4

காமன் மாறுபட்டு லந்ததோர் காடுகண்டேகித்
தாமவார் குழற்றாடகை படச்சரந் தூண்டி
ஏமமாகிய படைக்கலம் யாவையு மெய்தி
ஓம மாவலி யுறைந்ததோருறை யுள்சென் றுறைந்தார். 5

வெவ்விலிச்சின வீரரைக் காக்கென விடுத்தே
அவ்விடத்து மாமுனிவனும் வேள்வியை யமைக்க
எவ்விடத்தினு மரக்கர் வந்திடியென வார்த்தார்
வவ்விடச் சரமாரியால் வானத்தை மறைத்தார். 6

கண்ட வீரனு மரக்கரைக்கடிந்து தாடகையாம்
சண்ட வேகத் தடனையரி லொருவனைச் சரத்தால்
துண்ட மாக்கி மற்றொருவனைக்கடல் புகத்துரந்தான்
மண்டுவேள்வி செய் முனிவனுமதுகண்டு மகிழ்ந்தான். 7

கண்ட மாமறை முனிவனுந் தம்பி யுந்தானும்
கண்டல் சூழ்கரைக் கங்கையுங்கானமுங் கடந்து
பண்டைமா நிற மகலிகை பெறப்பணித் தருளி
விண்டொடும் மதின் மிதிலைமா நகரின் மேவினரால். 8

சனகர் கோனை வந்தணுகலுந்தழல் புரிவேள்வி
முனிவ விங்கிவ ராரெனக் கருளென மொழிந்தான்
வினயம் வேறிலை விறல்புனை தசரதனென்பான்
தனயர் மற்று நின்றனுவலி காண் குறச் சமைந்தார். 9

இந்திர வில்லென யாருமியம்ப
வந்தநெடுஞ்சிலை வள்ளல் வளைத்தான்
அந்தரவானி லரம்பை யரார்த்தார்
தந்தையுகந்திடச் சார்ந்திடு மென்றே. 10

சனகனலந்திகழ் தசரதனுக்கோர்
துனியறு மோலையைத் தூதொடுமேவத்
தனயரொடு ங்கிளர் தவமுனியோடும்
வினயம் வலான்மதின் மிதிலையடைந்தான். 11

தெள்ளமிழ்தம் புரை சீதையை யன்பால்
வள்ளலி ராமன் மகிழ்ந்து மணந்தான்
முள்ளில வெயிறிதழ் மூவரையும் போர்
வெள்ளிலை வேலவர் மூவரும் வேட்டார். 12

அந்நகர்தன்னை யகன்றனரிப்பால்
மன்னுமழுப்படையான் சிலைவாங்கி
யன்ன வனைத்தவமார விடுத்தே
பொன்னணிமாட வயோத்தி புகுந்தார். 13

## அயோத்தியா காண்டம்.

அரியணை மீதிலிருந்தரசாளும்
வரிகழன் மன்னன் வசிட்டனை நோக்கா
உரியதவம் புரிவேனென் மகற்கே
விரிகதிர்மோலி மிலைச்சுமினென்றான். 14

அன்னது கூனியறிந்தனள் சொல்லக்
கன்னன் மொழிக்குயில் கைகேசி கேட்டே
மன்னவ நீ முனளித்த வரத்தால்
என்மகனுக்கர சீந்தருளென்றாள். 15

வடிவுடைமன்னன் மயங்கினன் வீழ்ந்தும்
இடுகழல் வீர விராகவவின்றே
நெடில்படுகானக நீபுகுகென்றே
கொடியவள் சீரை கொடுத்தனளன்றே. 16

மலர்க்குழலாளொடும் வார்சிலைவண்கை
இலக்குவனோடு மிராகவனன்றே
அலக்கணுறுமலயோத்தி கடந்தே
நலக்குறுகங்கை நறுங்கரை நண்ணி. 17

அங்கணிருங்குக னம்பிவிடப் போய்க்
கங்கை கடைந்துறு கங்குலினங்கோர்
சங்கையின் மாமுனிசாலை யினண்ணிக்
கொங்கலர் சித்திரகூட மடைந்தான். 18

சித்திரகூட மடைந்திடு செய்தி
அத்தனறிந்திவனுருயிர் விட்டான்
வித்தகமா முனி மெய்ப்பரதற்கே
உய்த்த னனேலை யுணர்ந்தனன் வந்தான். 19

மன்னனுக்கு மகனுக்கு முற்றவா
றன்னை கூறவறிந்து மனந்தளர்ந்
தென்ன பாவிசெய்தாயென்றி ரங்கினன்
தன்னை மாமுனிதான் வந்து தேற்றினன். 20

இன்ன தந்தைக்கிங் கிமக்கடன் செய்த
பின்னைமா முடிசூடெனப் பேசிடப்
பன்னு மாலைப்பரதனிராகவன்
தன்னை நாளைத் தருவெனென்றோதியே. 21

சடையும் வற்கலையுந்தரித்தாங்கிரு
புடையுந் தாயரு மன்னரும் போதர
இடைய கங்கைக்குகனொடுமேறிப்போய்க்
கொடிகொள் சித்திரகூடஞ் சென்றெய்தினன். 22

வையமாளுடையானை வணங்கிப்பின்
ஐயன்வான மடைந்தது கூறிட
ஐயகோவென்ற ரற்றி யிராகவன்
கையினலக்கடன் கழித்தானரோ. 23

ஆதிமா முடிசூடென்றடி தொழப்
போதியேழிரண் டாண்டு பொறுத்தியென்
றோத மின்றி யிராகவன் கூறலும்
பாதுகங் கொடவனும் படர்ந்தனன். 24

## ஆரணிய காண்டம்.

*விடங்கொள் வேற்கை விராதனை வீட்டிப் போய்த்*
*தடங்கொள் வீடு சரபங்கனுக்களித்*
*துடங்கவா வமகத்தியன்றந்தபின்*
*இடங்கொள் பஞ்ச வடியிற் சென்றெய்தினான்.* **25**

*மங்கை சூர்ப்பணகைப் பெயர் மாதராள்*
*கொங்கை நாசிகுழை யொடரிந்த பின்*
*அங்கையாற்றன் வயிறலைத் தாலெனக்*
*கங்குல் வாழ்க்கைக் கரனுக்குரை செய்தாள்.* **26**

*கரனுந்தூடணனுங்கலினைப்பரித்*
*திரிசி ராவுஞ்சினப் படையீட்டமும்*
*வரனி ராமன் கைமாண்டதெல்லாங்கடி*
*துரைசெய்தாள் சென்றிராவணற் கோடியே.* **27**

*சீதைமற்றவன் றேவியைக்கொண்டியான்*
*போதலுற்றுழிப் புக்கதி தென்றலும்*
*காதலுற்றவட் காண்குறு மாசையான்*
*மாதுலற் கொருமாற்றஞ் சென்றோதினான்.* **28**

*மறுத்துணர்த்திட மாமன் மாரீசனும்*
*வெறுத் துரைத்தனன் வெஞ்சொலி ராவணன்*
*பொறுத்து நீயெனப் பொன்னிள நவ்வியாய்*
*நிறுத்த சீதை நிலையிற் சென்றெய்தினான்.* **29**

*கண்டு சீதை கவர்ந்தது தாவென*
*அண்டர்கோனுமதன் பின்னரேகியே*
*கொண்ட மாயை யறிந்து கொலைசெய்தான்*
*ஒண்டொடீஇ யிளையோயென்றலைந்ததே.* **30**

*அன்னமன்னவளவ் வுரை கேட்டலும்*
*தன்ன நாயகன் றம்பியை யேவினாள்*
*பன்ன சாலையிற் பார்ப்பன வேடமாய்*
*இன்னல் செய்ய விராவண னெய்தினான்.* **31**

மானமீது மடந்தையைக் கொண்டனன்
போனபோது புகுந்த சடாயுவை
ஈனமாக்கித் தானேறிய தேர்விடா
மீனவேலை யிலங்கையை மேவினான். 32

மன்னிராகவன்றம்பியை வந்தவா
றென்னை யென்ன வியன்ற துரை செய்தான்
பன்னசாலையிற் பாவையை நாடிப்போய்
முன்னர்வீழ்ந்த சடாயுவை முன்னினார். 33

இறந்த வெருவைக் கரசையீம வெரியேற்றி
முறஞ்செவியயோ முகியை மூக்கினை யரிந்து
மறந்தருகவந்தனையும் வானினிடை வைத்திட்
டறந்திகழ்தருஞ்சவரி யாச்சிரம முற்றார். 34

## கிட்கிந்தா காண்டம்.

மிக்க சவரிக்கினிய வீடருளி விட்டுப்
பக்கமது மிக்க மலர்ப்பம் பையது கண்ணுற்
றக்கணம கன்றநுமனுமென வுரைப்பச்
சுக்கிரிபனைத் துணையெனத் தொடர்வு கொண்டான். 35

மந்தரமெனத் திகழ் மராமரமதெய்தே
துந்துபிகளை பரமதைச் சுவடுறுத்தி
இந்திரன் மகற்கிமய லோக மருளித்தன்
அந்தமுடை வாளவன் மகன் பெறவளித்தான். 36

சுக்கிரிபனுக்குரிய தொன்முடிகவித்தே
மிக்கதிறல்வானரர் கண்மேவ வருவித்தே
கக்குமுகின் மிக்க மழைக்கால மதகன்றால்
இக்கண்வருவாயென விராகவன் விடுத்தான். 37

சுந்தரனுமத்துணை துயர்க்கடலு ளாழ்ந்தான்
இந்திரன் மகற்குரிய தெய்தின னிருந்தான்
வந்திலனருக்கன் மகன் மாரிகழிவுற்றும்
தந்தனையெனக்கடிது தம்பியை விடுத்தான், 38

மற்றவனழைத் தருளமாருதியுமேனைக்
கொற்றவனும் வந்தனரிராமனடிகூடி
எற்றது செயக்கடவ தென்றனரிருந்தார்
முற்றிழையை நாடவிடுமென்றிறை மொழிந்தான். 39

அன்றநுமனங்க தனறிந்தருள் செய்சாம்பன்
என்றவர் கடம்முடனிரண்டு கவிவெள்ளம்
சென்றனர் கடென்றிசையினிற் கடிதுசில்லோர்
பொன்றலில் பிலத்திடை புகுந்தனர் பெயர்ந்தார். 40

குன்றமுநதிகளுங் குழைந்தகானமும்
தென்றிசையெங்கணுந் தேடிக் காண்கிலர்
இன்றுயிர் விடுவதே நன்றென்றி யாவரும்
மன்றல்சேர் மகேந்திரவரையை மேவினர். 41

## சுந்தரகாண்டம்.

இறைவியாண்டிருந்த வாறெருவை வேந்தனும்
முறைமையால் வந்தவாமொழியக் கேட்டபின்
அறைகழலநு மனுமரக்கிவாய் பிளந்
தெறிகடல் கடந்து போயிலங்கை யெய்தினன். 42

எரிவிழியிலங்கைமாதேவிதான்கெடக்
கருநிற வரக்கர் தங்கனகமாளிகைத்
தெரிவையை யெங்கணுந்தேடிக்காண்கிலான்
அரிமலர்ச்சோலை கண்டாழி காட்டினன். 43

மானவனறிந்தருண் மதுரமாமணி
சானகியளித்தனள் விடையுந் தந்தபின்
யானிவண் வந்து வீணேகறீ தெனுப்
போனமா மாருதி பொழிலை வாட்டினன். 44

காட்டொரு வானரங்கடிகொள் சேனையை
வீட்டினதென்று காவலர் சென்றோதலும்
கேட்டனன் றசமுகன் கிளர்ந்த சேனையை
மூட்டின னதனெதிர நுமன் முன்னினன். 45

தொக்கரக்கரைத் தூரந்து தோரணத்திருந்துபோய்
அக்கனைத்தரைப்படுத் தரைத்திரத்த மிக்கெழத்
தக்க சம்பு மாலியைத் தரைப்படுத்தி வெற்றிசேர்
பக்க நின்ற பஞ்சசேனை மன்னரைப்படுத்தினான். 46

மேகநாதன் வந்தெதிர்த்து வேத நான் முகன்றரும்
நாகபாசம் வீசி ஞான நாதனைக்கொணர்ந்துதம்
ஓகை வாளி ராவணற்குரைத்தலும் முருத்தெழா
ஏகவாலினங்கி யிட்டெரித்திடென்றியம்பினான். 47

வாலின் வைத்ததீயை மாட மாளிகைக்கண் வைத்தபின்
சால வந்து சீதையைப்பணிந்து சாகரந்தனைக்
காலினேகி வந்து தங்கவிக்குலத்து வீரராம்
வேலைசூழ வேலிராமன் விட்டசோலை கிட்டினான். 48

மன்றலோதிதந்த கோலமணியை நல்கி மாருதி
நின்று வாசகங்கள் கூற நீடு வேலி ராமனும்
என்றின்மைந்த விப்பதாதி யெழுக வென்றெழுந்தபின்
தென்றிசைக் கருங்கடற்றிரைப் புறத்து மேவினார். 49

## உயுத்த காண்டம்.

கடற்கரை யிறுத்தனன் கவியின் சேனையோ
டடற்படை யிராகவனரக்கனேவலால்
மடற்கம லத்தயன் மயனுந்தானுமாய்ப்
படைத்தன னிலங்கையைப் பண்டு போலவே. 50

மேலுயர் மண்டபத்திருந்து வெய்யவன்
தோலியல் குரங்கிவ் வூர்ச் சுட்டதாவென
மாலியவான் முதலரக் காவல்லெனை
ஓலுயர் கடலென வுளையக் கூவினார். 51

மைந்தனிந் திரசித்து மவுலியான
தந்தை தன்னொடு கூறத்தடுத்தெதிர்
தந்த போதவர் தங்கட் கயில்படு
வெந்த புண்ணென வீடணன் கூறுவான். 52

இரணியனென்பவன் யாவர் தம்பினும்
முரணி யனவனிவன் முனியமாய்ந்தனன்
அரணிய நெஞ்சினுன வன்றன் றேவியாம்
தரணியின் ருயை விட்டருளறக்கதால். 53

என்றனுமிராவண னெரியுஞ் சிந்தையான்
நின்றனேயேனினே யடுவலீங்கெனத்
தன்றுணே நால்வருந்தானும் வீடணன்
வென்றி கொளிராகவன் சரண மேவினுன். 54

கடலுடையிலங்கை யினரணுங் காவலன்
உடைய நீள் வரங்களு மைந்த ருற்றமும்
படையின திட்டமும் பகர்தி நீயென
அடையவாளி ராமனுக் கரக்கன் கூறினுன். 55

வேண்டினனொரு வழிவேலே வேந்தனே
ஈண்டிய விலங்கைக் கன்றெய்த லின்மையால்
தூண்டினன்சுடு சரம் வருணன் றேன்றிவந்
தாண்ட கையிரா கவனடியின் வீழ்ந்தனன். 56

ஆனபேர் வேலையை யடைத்த பின்புயர்
மானவர் தலேவனும் வானரேசனும்
கோனகரின் புறக்குன்றி றுத்தபின்
ஊனமிலிரா வணனெற்றர் மேவினுர். 57

பற்றினர் சாரண சுகரைப்பன் முறை
சொற்றனர் கண்ட வத்துாய மானவன்
விற்றெழில் வீடணர்க்கரசு விட்டதும்
கொற்றவர்க்குரைக் கெனக்கூறிப் போக்கினுன். 58

சேதுபந்தமும் வீடணன் செய்தியும்
தூது சென்றவர் சொல்லத் தசமுகன்
ஓதும் வெவ்வுரையோதி னனப்பொழு
தேதமின்றி யெழுந்த திரவியே. 59

இலங்கைவேந்தனு மிராமனுமெரி படை காண்பான்
இலங்கை மாளிகைத் தலேயினு மலேயினுமேற
இலங்கையான் மணி முடிபறித்திரவி சேயகன்றுன்
இலங்கை வேந்தனு மிராமனு மிருக்கை சென்றடைந்தார். 60

நாலுவாயிலு நாரும்வானரருமே நண்ணி
ஓலவேலையினுருத்தன ரெனச்சிலருரைத்தார்
ஆலகாலவேலரக்கனும் படை வருத்தமைந்தான்
வேலிராகவனங்கதற் றாதெனவிட்டான். 61

சீதையென்னுமத் திருவைவிட்டுன் சிரம்பெறுகென்
றோதி விட்டனனிராம னென்றங்கதனுரைத்தான்
போதி போதியென்றி ராவணன் புகறலுமிராமன்
பாதபங்கயம் பணிந்தன னெழுந்தது பதாதி. 62

அரக்கரைம்பது வெள்ளமு மனிகமுமுடையக்
குரக்குவேந்தனுமநுமனு நீலனுங்குறைத்தார்
அரக்கனவ்வுரை கேட்டு வந்தடர்த்தலுமநுமன்
குரக்குவேந்தர் மற்றவரவன் சரம்படக் குலைந்தார். 63

இளையவீரனு மிராவணனிரைந்து சிலையும்
உளையவெய்தனனுடம் பிடியவனுரத்துய்த்தே
வளையும் வாளெயிற்றி ராவணன் வவ்வுவான் செல்ல
இளையவீரனை மாருதியெடுத்துக் கொண்டகன்றான். 64

ஆளியாயிரம் பூண்டதேர ரக்கன்வந்தடர்த்தான்
காளை மாருதிதோளின் மேலிராமனுங்கடந்தான்
மூளும் வார்சிலை பத்துடன் முடிபத்து மொழித்து
நாளைவாபொர வென்றனனகர் சென்றுபுக்கான். 65

மூலத்தானையைத் தருகெனத்தூதரை முடுக்கிக்
கோலப்பள்ளியிற் குறுகலுங் குரவன் வந்தணுகிச்
சாலச்சாம்பினை முன்னமே சாற்றினனென்றான்
மாலைத்திண்புய மகோதரன் மறுத்திது சொன்னான். 66

கும்பகன்னனை யழைக்கெனத் தூதருங்கொணர்ந்தார்
எம்பிபோரினையியற்றுதி மனிதரோடென்றான்
வெம்புபோர்க்களம் புகுந்தனன் வினவினனிராமன்
தம்பி நானிவற்றருகென்றான் றசமுகற் கிளையான். 67

வியந்து வீடணனழைத்தலும் வெய்யவன் மறுத்து
வயந்தனைப் பிசைந்தருக்கன் மாமகனைக்கொண்டகன்றான்
இயைந்த நாசிகொண்டிரவிசேய கன்றன னிராமன்
உயர்ந்தொரம்பினலவன்றலை யுவரியிலிட்டான். 68

அப்புறத்தினின் மறுத்தனைச் சனகர் கோனாக்கிக்
குப்புறத்தினன் மகோதரன் சீதையுங்குலைந்தாள்
எப்புறத்தினு மிராவணன் செவியெலாங்கேட்க
இப்புறத்தினின்றார்த்த தங்கி ராவணன்சேனை. 69

கும்பகன்னன் குறைந்தமை கூறிடத்
தம்பியோவென்ற ரற்றித்தச முகன்
அம்பொற்றேரதி காயனை யேவினான்
எம்பிராற் கிளையோ னெதிர்தாக்கினான். 70

எதிரெதிர் தாக்கின விரண்டு சேனையும்
கதுமென விராகவற் கிளையகாவலன்
அதிர் கழல் புனையதி காயன்றன்னையோர்
சது முகன் சரத்தினாற்றலையைத் தள்ளினான். 71

குரக்குவேந்தர்கள் குன்றுகொண்டேவலும்
அரக்கன்மைந்தரை வருமாண்டனர்
பரக்க வன்கொலைப்பாடு கண்டார்சிலர்
இரக்கமெய்தி யிராவணற்கோதினார். 72

அரக்கனவ்வுரை கேட்டலு மங்ஙனே
இரக்க முற்றிந்திர சித்தை யேவினான்
குரக்கு வேலையைக் கொன்றனன் கொன்றபின்
தரைக்கு நாயகன்றம்பியை யெய்தினான். 73

ஏரழுங்க விலக்குவன் மேனிமேல்
கூரழுங்க நெடுஞ்சரங் கூட்டினான்
தேரழிந்து தசமுகன் றிண்மகன்
போரழிந்து விசும்பிடைப் போயினான். 74

இடந்தரு மிராகவற் கிளவலைக்கவித்
தடம்புனை யெழுபது வெள்ளத்தானையை
அடங்கலு மரக்கன் மாமதலை யல்லிடை
விடந்தருநாக பாசத்தின் வீக்கினான். 75

போயின னரக்கனும் புரண்டு வானரர்
கூயினரி ராகவற் கனலன் கூறிட
மேயினன் வருந்தினன் விகங்கராசனும்
பாயின னுரகனைப் படுத்திப் போயினான். 76

சென்ற தூதுவர் சொலத் தெச முகத்தவன்
தன்றகு பெரும் படைத்தலைவர் கூயினன்
நின்றிலர் கொன்றனர் நிசிதர்தங்களைக்
கொன்றனர் வானரத்தலைவர் குன்றினல். 77

உரையது கேட்டு மைந்தர்க் குரைத்தனு மரக்கர் கோமான்
கரன்மகன் மகரக்கண்ணன் செல்கெனக் காற்றினம்பும்
வருணன்றனம்பும் கூட்டி மாயையா விட்டான் மாயன்
பொருசர மொன்றுற் சென்னி போக்கினன் மாயை யோடும். 78

இற்றனரரக்கர் தானை யிருபது வெள்ளத்தோடும்
செற்ற வாளரக்கன் கேட்டான் மைந்தனைச் சேறியென்றான்
மற்றவன்றேரிமேலறி வானரப் படையைச் சீறி
எற்றுவனினி யென்றெண்ணி யிலக்குவன்றன்னோ டேற்றான். 79

அறுபது வெள்ளத் தானையாயிரந் தேரினோடும்
வெறுவது செய்யக்கண்டு மயன் படைவிடுவேனென்றும்
உறுவலியரக் கன்வானத் தொளிந்தனை யோரான்றம்பி
எறிபடை பூசை செய்வானெழுந்தனனி ராமனிப்பால். 80

உரைத்தனனி ராவணி யிராவணற் குற்றவா றெல்லாம்
வரைப்புயம கோதரன்வ ருகவென் றேவினன் வலத்தால்
குரைத்தெழும் வானரக்குழுவை வென்றிலக்குவன் சரத்தால்
பொருக்கென வெழுந்தனனந்தர விசும்பிடைப்போனன். 81

முட்டின மகோதரன் முனிவரு மமரர்களாகச்
சிட்டனீ தென்னை கொலென்றுளந்திகைக் தனனின்றான்
விட்டன னயன்படை யிராவணியிலக்குவன்மீதே
பட்டனன் பட்டவாறிராவணற் குவகையிற் பகர்ந்தான். 82

ஏய்ந்தெழிலிராகவனிலக்குவன் பாடுகண் டேங்கிச்
சாய்ந்தனன் சாம்புவன் மாருதி தருதியாலென்னப்
பாய்ந்தனன் மருந்து கொண் டமரிடையயனது படையால்
ஓய்ந்தவர் யாவரு முயிர்த்தனர் தூதர் போயுரைத்தார். 83

யாவதிங்குநாஞ் செய்வதென்றியம்பலுமைந்தன்
ஆவதுண்டென வரக்கனு மதுசெயென்றடைந்தான்
தேவி சீதையாச் சமைத்த பின்னனுமன் முன்சிதைத்துப்
போவனனயோத்தி யிலென நிகும்பலை புக்கான். 84

ஆயவாறெலா மறுமன் வந்திராகவற்கறைய
மாயையேயென வீடணன் வலிக்கின்றதென்றான்
ஏயகாரியஞ் செய்தி ரென்றெழுந்தனனெம்மான்
போயொர் மாயையால் வீடணனிலங்கையிற் புக்கான். 85

ஆனமர்யை கண்டறிந்து வந்தரக்கர் கோனுரைப்ப
வானரேசனுமிளவலும் வடதரு நீழல்
சேனைசூழ்தர நிகும்பலை வேள்வியைச் சிதைத்தே
போர்போதெதிரிந்திர சித்தமர் புரிந்தான். 86

கறுத்திராவணி விடுங்கணையெலாம் விடுகணையால்
இறுத்தொரம்பினாற் கையுடன் வில்விழவெய்தான்
குறித்தொர் சூலத்தாலிலக்குவ னுயிர்கொளக் கொதித்தான்
அறுத்தொரம்பினாலவன்றலை கொண்டவனகன்றான். 87

அடுத்துரைத்தனர் தூதுவரரக்கர் கோன்களம்புக்
கெடுத்திரங்கினன் மதலைதன்றலை யிலாயாக்கை
படுத்தினன்றயிலத்திடை மூலமாப்படையும்
விடுத்துவந்தடி பணிந்தனராயிரவெள்ளம். 88

மூலத்தானையை யிராமன்மேன் முடுக்கித்தான் சூரக்குக்
கூலத்தானை மேற் சென்றனனி ராவணக்கொடியோன்
மூலத்தானை சென்றிராமனை முடுக்கலுங்குரக்குக்
கூலத்தானை போயிரிந்தன குரைகடற்கப்பால். 89

வேர்த்திருந்த வக்கவியெலாமங்கதன் மீட்பக்
காத்திநீயெனத் தம்பியைக் காவலா விடுத்தே
ஆர்த்த வெம்படையாயிர வெள்ளமுமடியக்
கோத்தவம்பினா லேழரை நாழிகை குறைத்தான். 90

அத்தனச் சிலையிளவலோட ரக்கர்கோனடர
வித்தினன் சரம்பலப்பல விளவலும் விட்டான்
எத்தினன்னெடு மோகமாப்படைதொடுத்தெய்தான்
அத்தனச் சரமாழியான் சரத்தினாலட்டான். 91

அறிந்து கூறினன் வீடணனுமென வயில்வேல்
எறிந்த னன்னவன் மேனியிலிலக்குவனேற்றான்
பிறிந்து போயின விராவணன் மாருதி பெயர்த்தும்
செறிந்த மாமருந்தழைத்தலினுயிர் பெற்றான் சேயோன். 92

சென்று கூடினனிராமனைத் தெச முகத்தவனும்
வென்றி மூலமாத்தானைக்குவிருந்திட வமைந்தான்
பொன்றினு ரவரென்பது தூதுவர் புகலக்
கன்றினன் களம் புக்கனன் கவியெலா மவிய. 93

பூதல மளித்தோன் கூறப் புரந்தரன் கொடுத்ததிண்டேர்
மாதலி கொணரவேறி மகிழ்ந்தன னிராமனென்று
காதின வரக்கர் சேனை கவிப்பெருஞ்சேனையான்ப
கோதரன்றன்னையாவி குறைத்தனன் பகழியொன்றால். 94

அந்தரத்தரக்கன்போக வமலன்றேரணுக விட்டான்
மந்திரமாயையெய்ய ஞானத்தால் வள்ளன் மாய்த்தான்
உந்தின சூலமொன்றை யுருத்தன னுங்காரத்தால்
கந்தரத்தலைகள் பத்துங் கரங்களுங்கணை யாற்கொய்தான். 95

கிளைத்தன சிரமுந்தோளுங் கேடிலானெய்யவெய்ய
விளைத்ததோர்வரமுண்டென்னவிரிஞ்சன்மாப்படையை விட்டான்
உளைத்த வன்றலத்து வீழ்ந்தானுடன் பிறப்பென்னு மன்பால்
இளைத்து வந்தடியில் வீழ்ந்தானிராவணற் கிளையகாளை. 96

மயன் மகள் வந்து மாய்ந்தாள் வருகென நிருதர்கூவிப்
புயவலி யிராம வேந்தைப் போற்றுதிரென விராமன்
இயமலி யிமஞ் சேர்த்தி யென்றலு மரக்கன் சேர்த்தான்
செயமலியநு மன்றன்னைச் சீதை பாற்சேறியென்றான். 97

சென்றனனநுமனோடு வீடணன் சீதை தன்பால்
நின்றவணிகழ்ந்தவாறு நிரப்பி மஞ்சனநீராட்டி
ஒன்றிய கலன்கள் பூட்டியுய்த்தன னிராமனோக்கி
நன்றுநீ செய்ததென்ன நடுங்கினளெரிபுக்குய்ந்தாள். 98

ஏறிட விமானந்தன்னில் யாவருமிறைவிதானும்
மாறின வசந்தன் சேனை நின்றது மலரவன்பால்
கூறினவநுமன் வாங்கிக்கொண்டபின் குரிசிறானும்
ஆறியபரத்து வாசனணி மலர்ச்சோலை புக்கான். 99

வரதனு மநுமன்றன்னை வரன் முறையேவ லோடும்
பரதனை யெரி புகாமற் பண்ணினன் மீண்ட பின்னர்
எரிமணி விமானத்தேறி யாவரு மிளையகோவும்
அரிமலர்க் குழலினளு மிராமனு மயோத்தி சேர்ந்தார். 100

ஸ்ரீ:

# *பெருமாள் புறப்பாடு.

கம்புவைத்தரித்தகையிற் கார்முகந்தரித்தான் வந்தான்
அம்புயக் கண்ணன் வந்தா னன்பருக்கன்பன் வந்தான்
தம்பியர்க்கினியான் வந்தான் றசரத ராமன் வந்தான்
உம்பருக் கமிழ்த முன்னாளுதவிய வொருவன் வந்தான். 1

மனுகுலம் விளங்கத்தோன்றி வரிசிலை யிளையாளேடும்
முனியொடு போனான் வந்தான் முப்புர மெரித்த வில்லி
தனுவினையிறுத்துச் சீதைதனைக் கரம்பிடித்தான் வந்தான்
அனையவளுடனே மீண்டு மயோத்தியிலடைந்தான் வந்தான். 2

தாயுரைதலைமேற்கொண்டு தையலை யுடனேகொண்டு
தீயவெங்கானஞ் சேர்ந்த செருவலி வில்லி வந்தான்
தூயமாமுனிவன் முன்புதோன்றிய தூயோன் வந்தான்
மாயமாரீசன்மாள வரிசிலை வளைத்தோன் வந்தான். 3

அநுமனை யடிமைகொண்டாங்கா யிரங்கதிரோன் மைந்தற்
கினியனாய் வாலிமாள வெரிசரந் துரந்தான் வந்தான்
நினைவதன் முன்னமாழி நீரெலாநெருப்பதாகக்
குனிசிலை வளைத்தான் வந்தான் கோசலை நாடன் வந்தான். 4

குன்றினாலாழி கட்டிக் கொடுந்திறற் சேனையோடு
சென்றிராக் கதரையெல்லாஞ் செருக்களத்தவிய நூறித்
தன்றிறலழிந்து நின்றதசமுகன் வலிமைகண்டங்
கின்றுபோய் நாளைவாவென்றியம்பிய விறைவன் வந்தான். 5

முன்னநாஞ் சொன்னநாளின் முடிகிநாஞ் செல்லோமாயின்
வன்னியின் பரதன் வீழுமென்றுதன் மனத்திலெண்ணி
அன்னவனெறி விழாமலநுமனை முன்னே யேவிப்
பொன்னகரடைந்தான் வந்தான் புவன மூன்றுடையான் வந்தான். 6

* இராமாவதாரம். உத்தரகாண்டம். அசுவமேதயாகப் படலம்.

ஸ்ரீ :

# கலம்பகம்.

## பரதத்துவம்.

முப்பரம்பொருளிற்குண் முதலே மூலத்தை
இப்பரந்துடைத்தவ செய்துமின்பத்தை
அப்பனையப்பினு ளமிர்தந்தன்னையே
ஒப்பனை யொப்பனை யுரைக்கவொண்ணுமோ. 1

உலகம் யாவையும் படைத்தளித்துண்டுமிமொருவன்
இலகமார் பகத்திருந்துயிர் யாவையு மீன்ற
திலகவாணுதல் சென்னியிற் சூடியதெரியல்
அலகின்மாமுனி பெறுகென வளித்தனளளியால். 2

தெய்வ நாயகிசென்னியிற் சூடியதெரியல்
அய்ய யான்பெறப் புரிந்ததெத்தவ மெனவாடி
வெய்ய மாமுனி சென்னியிற் சூடியே வினைபோய்
உய்யுமாறி தென்று வந்துவந்தும்பர் நாடடைந்தான். 3

பூதனாயகன் புவியகனாயகன் பொருவில்
வேத நாயகன் மார்பகத்தினிது வீற்றிருக்கும்
ஆதி நாயகி விருப்புறு தெரியல் கொண்டணைந்த
மாதராள் வயிற்பெற்றனன் முயன்றமாதவத்தால். 4

வெருவு மாலமும் பிறையும் வெவ்விடையவற் கீந்து
தருவும் வேறுள தகைமையுஞ்ச தமகற்கருளி
மருவுதொல் பெருவளங்களும் வேறுற வழங்கி
திருவு மாரமு மணிந்தனன் சீதரமூர்த்தி. 5

(1) பால காண்டம். கடிமணப்படலம்.

(2) முதல் (5) வரை. ஷை அகலிகைப்படலம்.

போதமும் பொருந்துகேள்விப் புரையறு பயனும் பொய்தீர்
மாதவஞ்சார்ந்த தீராவரங்களுமற்று முற்றும்
யாதவனினைந்தானன்ன பயத்தன வேதுவேண்டின்
வேதமுமறனுஞ் சொல்லு மெய்யற மூர்த்தி வில்லோன். 6

காரணங் கேட்டியாயிற் கடையிலாமறையின் கண்ணும்
ஆரணங்காட்ட மாட்டாவறிவினுக் கறிவுமன்னோன்
போரணங்கிடங்கர்கௌவப் பொது நின்றமுதலேயென்ற
வாரணங்காக்க வந்தானமரரைக் காக்கவந்தான். 7

மூலவுநடுவுமீறு மில்லதோர் மும்மைத்தாய
காலமுங் கணக்கு நீத்த காரணன் கைவிலேந்திச்
சூலமுந்திகிரி சங்குங் கரகமுந்துறந்து தொல்லை
ஆலமுமலரும் வெள்ளிப் பொருப்பும் விட்டயோத்தி வந்தான். 8

அறந்தலை நிறுத்தி வேதமருள் சுரந்தறைந்த நீதித்
திறந்தெரிந்துலகம் பூணச் செந்நெறி செலுத்தித் தீயோர்
இறந்துகநூறித்தக்கோ ரிடர் துடைத்தேகவிண்டு
பிறந்தனன்றன் பொற்பாத மேத்துவார் பிறப்பறுப்பான். 9

கண்டனென் கற்பினுக் கணியைக் கண்களால்
தெண்டிரை யலைகடலிலங்கைத் தென்னகர்
அண்டர்நாயக வினித்துறத்தி யையமும்
பண்டுள துயருமென்றநுமன் பன்னுவான். 10

உன்பெருந் தேவியென்னு முரிமைக்கு முன்னைப்பெற்ற
மன்பெரு மருகி யென்னும் வாய்மைக்கு மிதிலை மன்னன்
தன்பெருந்தனயை யென்னுந் தகைமைக்குந் தலைமை சான்றாள்
என்பெருந் தெய்வமய்யா வின்னமுங் கேட்டியென்பான். 11

பொன்னல தில்லைப் பொன்னை யொப்பெனப் பொறையினின்றாள்
தன்னலதில்லைத் தன்னை யொப்பெனத் தனக்கு வந்த
நின்னலதில்லை நின்னையொப்பென நினக்கு நேர்ந்தாள்
என்னலதில்லை யென்னை யொப்பென வெனக்கு மீந்தாள். 12

---

(6) முதல் (9) வரை. சுந்தரகாண்டம். பிணிவீட்டுப்படலம்.

(10) முதல் (17) வரை சுந்தரகாண்டம். திருவடிதொழுதபடலம்.

உன்குல முன்னதாக்கி யுயர்புகழ்க் கொருத்தியாய
தன்குலந்தன்ன தாக்கித்தன்னை யித்தனிமை செய்தான்
வன்குலம் கூற்றுக் கீந்தவ்வானவர் குலத்தை வாழ்வித்
தென்குல மெனக்குத் தந்தானென்னினிச் செய்வதெம்மோய். 13

விற்பெருந் தடந்தோள் வீரவீங்கு நீரிலங்கைவெற்பின்
நற்பெருந்தவத்தளாய நங்கையைக் கண்டேனல்லேன்
இற்பிறப் பென்பதொன்று மிருப்பொறை யென்பதொன்றும்
கற்பெனும் பெயரதொன்றுங் களிநடம் புரியக்கண்டேன். 14

கண்ணினு முனைநீ தையல் கருத்தினு முனைநீவாயின்
எண்ணினுமுனைநீ கொங்கை யிணைக்குவை தன்னினெவ்வா
தண்ணல் வெங்காமனெய்த வலரம்பு தொளைத்தவாறுப்
புண்ணினுமுளை நீநின்னைப் பிரிந்தமை பொருந்திற்றுமோ. 15

இலங்கையை முழுதுநாடி யிராவணனிருக்கையெய்திப்
பொலங்குழைய வரையெல்லாம் பொதுவுற நோக்கிப்போந்தேன்
அலங்குதண் சோலைபுக்கேனவ்வழி யணங்கனைக்
கலங்கு தெண்டிரையிற்றாய கண்ணினீர்க்கடலிற் கண்டேன். 16

ஒரு கணத்திரண்டு கண்டேனொளி மணியாழியான்ற
திருமுலைத் தடத்துவைத்தாள் வைத்தலுஞ் செல்வநின்பால்
விரகமென்பதனின் வந்த வெங்கொழுந் தீயினல்வெந்
துருகியதுடனே யாறிவலித்தது குளிர்ப்புறுற. 17

பூவிற்றிருவை யழகின் புனைகலத்தை
யாவர்க்குஞ் செல்வத்தை வீடென்னுமின்பத்தை
ஆவித்துணையை யமுதிற் பிறந்தாளைத்
தேவர்க்குந் தம்மோயை யேவினார் பாற்செல்ல. 18

செந்தாமரைப் பொகுட்டிற் செம்மாந்து வீற்றிருக்கும்
நந்தா விளக்கை நறுந்தாழிளய் கொழுந்தை
முந்தாவுலகு முயிரு முறை முறையே
தந்தானை நோக்கினான்றன் னெப்பொன்றில்லாதான். 19

(18) முதல் (20) வரை உயுத்தகாண்டம். இரணியன் வதைப் படலம்.

நீதிலாவாக வுலகின்ற தெய்வத்தைக்
காதலானோக்கி னான்கண்ட முனிக்கணங்கள்
ஓதினார்சீர்த்தி யுயர்ந்த பரஞ்சுடரும்
நோதலாங்கில்லாத வன்பனையேநோக்கினான். 20

அரக்கனேயாக வேறோமரனே யாகவன்றிக்
குரக்கினத்தலைவனே தானாகுக கொடுமையாக
இரக்கமே யாகவந்திங் கெம்பிரானுமஞ் சொல்லி
உருக்கினனுணர்வைத் தந்தானுயிரிதினு தவியுண்டோ. 21

மும்மையாமுல கந்தந்தமுதல்வற்கு முதல்வன்றாதாய்ச்
செம்மையாலு யிர்தந்தாய்க்குச் செயலென்னா லெளியதுண்டே
அம்மையாயத் தனாயவப்பனே யருளின்வாழ்வே
இம்மையே மறுமைதானு நல்கினை விசையோடென்றாள். 22

பாழிய பணைத்தோள் வீரதுணையிலேன் பரிவுதீர்த்த
வாழியவள்ளலே யான்மறுவிலா மனத்தேனென்னின்
ஊழியோர் பகலாயோதும் யாண்டெலா முலகமேழும்
ஏழும் வீவுற்றஞான்று மின்றென விருத்தியென்றாள். 23

## திருமந்திரம்.

காமம்யாவையுந் தருவதுமப் பதங்கடந்தாற்
சேமவீடுறச் செய்வதுஞ் செந்தழன்முகந்த
ஓமவேள்வி யினுறுபத முய்ப்பதுமொருவன்
நாமமன்னது கேண்மோ நாராயணாய. 24

மண்ணினின்று மேன்மலர யனுலகுறவாழும்
எண்ணில் பூதங்க ணிற்பன திரிவன விவற்றின்
உண்ணிறைந்துறை கரணத்தினாங் குளவுணர்வின்
எண்ணுகின்ற திவ்வெட்டெழுத்தே பிறிதில்லை. 25

---

(21) முதல் (23) வரை, சுந்தரகாண்டம், உருக்காட்டு படலம்.

(24) முதல் (27) வரை, உயுத்தகாண்டம். இரணியன் வதைப் படலம்.

முக்கட்டேவனு நான்முகத்தொருவனு முதலா
மக்கட்காறு மிம்மந்திரமறந்தவர் மறந்தார்
புக்குக்காட்டுவதரிதிது பொதுவுறக் காண்பார்
ஒக்கநோக்கின ரல்லவரதனிலை யுணரார். 26

தோற்றமென்னுமத் தொல்வினைத்தொடு கடற்சுழிநின்
றேற்றுநன் கலனருங்கலன் யாவர்க்குமினிய
மாற்றமங்கல மாதவவேதத்தின் வரம்பின்
தேற்றமெய்ப் பொருடெரிந்த மற்றிதனிலைசிறந்த. 27

மும்மை சாலுலகுக்கெல்லா மூலமந்திரத்தை முற்றும்
தம்மையே தமர்க்குநல்குந் தனிப்பெரும் பதத்தைத்தானே
இம்மையேயெழுமை நோய்க்கு மருந்தினை யிராமனென்னும்
செம்மைசேர் நாமந்தன்னைக் கண்களிற்றெரியக் கண்டான். 28

## கருடஸேவை.

திரைகெழு பயோததித் துயிலுந்தெய்வவான்
மரகதமலையினை வழுத்தி நெஞ்சினுற்
கரக மலங்குவித் திருந்த காலையிற்
பரகதி யுணர்ந்தவர்க்கு தவுபண்ணவன். 29

கருமுகிழு மரைக்காடு பூத்துநீ
டிருசுடரிரு புறத்தேந்தி யேடவிழ்
திருவொடும் பொலியவோர் செம்பொற் குன்றின்மேல்
வருவபோற் கலுழன்மேல் வந்துதோன்றினான். 30

## நாதன் பாதுகம்.

விம்மினன் பரதனும் வேறு செய்வதொன்
றின்மையினரிதென வெண்ணியேங்குவான்
செம்மையின்றிரு வடித்தலந்தந் தீகென
எம்மையுந்தருவன விரண்டு நல்கினான். 31

(28) கிட்கிந்தா காண்டம். வாலி வதைப்படலம்.

(29), (30) பாலகாண்டம். திருவவதாரப்படலம்.

(31) முதல் (34) வரை அயோத்தியாகாண்டம். திருவடிசூட்டுப் படலம்.

அடித்தலமிரண்டையு மழுத கண்ணினன்
முடித்தலமிவையென முறையிற் சூடினன்
படித்தலத் திறைஞ்சினன் பரதன் போயினன்
பொடித்தல மிலங்குறுபொலங்கொண் மேனியான். 32

பாதுகந்தலைக்கொடு பரதன் பைம்புனல்
மோதுகங்கையின் கரைகடந்து முந்தினன்
போது குங்கடிபொழி லயோத்தி புக்கிலன்
ஓது கின்குலி னெடிதுறக்க நீங்கினன். 33

நந்தியம்பதியிடை நாதன் பாதுகம்
செந்தனிக் கோன்முறை செலுத்தச் சிந்தையான்
இந்தியங் களையவித்திருத் தன்மெயினன்
அந்தியம் பகலு நீரருத கண்ணினன். 34

நடுவினிப் பகர்வதென்னை நாயக நாயினேனை
உடனுதித்தவர்களோடு மொருவனென்றுரையாநின்றாய்
அடிமையிற் சிறந்தேனென்னு வயிர்ப்பொடு மச்சநீங்கித்
தொடுகழற்செம்பொன்மௌலிசென்னியிற்சூட்டிக்கொண்டான். 35

தேடுவார்தேட நின்றசேவடி தானுந்தேடி
நாடுவான வன்றுகண்ட நான்முகன் கழீஇயநன்னீர்
ஆடுவார் பாவமஞ்சு நீங்கிமேல மாராவார்
சூடுவாரெய்துந் தன்மை சொல்லுவார் யாவர் சொல்லீர். 36

இற்றை நாளளவும் யாருமிருடிகளி மையோர்ஞான
முற்றினாரன்பு பூண்டார் வேள்விகண் முடித்துநின்றார்
மற்று மாதவருமெல்லாம் வாளெயிற்றி லங்கைவேந்தன்
பெற்றதார் பெற்றாரென்று வியந்தனர் பெரியோரெல்லாம். 37

## அபயப்ரதானம்.

ஆவுக்காயினு மந்தணர்க்காயினும்
யாவர்க்கானு மெளியவர்க் காயினும்
சாவப்பெற்றவரே தகைவானுறை
தேவர்க்குந் தொழுந்தேவர்களாகுவார். 38

(35) முதல் (37) வரை உயுத்தகாண்டம். விபீடணனடைக்கலப் படலம். (38) ஆரணியகாண்டம். அகத்தியப்படலம்.

மற்றினி யுரைப்பதில்லை மாருதி வடித்துச்சொன்ன
பெற்றியேபெற்றி யன்ன தன்றெனிற் பிறிதொன்றாலும்
வெற்றியே பெருக தோற்க வீகவீயாது வாழ்க
பற்றுதலன்றி யுண்டோ புகலெமைப்பகர் கின்றானே. 39

இன்று வந்தானென்றுண்டோ வெந்தையை யாயை முன்னைக்
கொன்று வந்தானென்றுண்டோ புகலது கூறுகின்றான்
தொன்று வந்தன்பு பூணுந்துணை வனுமவனே பின்னைப்
பின்றுமென்றாலு நம்பாற் புகழன்றிப் பிறிதுண்டாமோ. 40

காரிய மாகவன்றே யாருக கருணையோர்க்குச்
சீரிய தன்மை நோக்கி னிதனின்மேற்சிறந்ததுண்டோ
பூரிய ரேயுந்தம்மைப் புகல் புகுந்தோர்க்குப் பொன்றா
ஆருயிர் கொடுத்துக்காத்தற் கெண்ணிலாவரசர்க் கென்னும். 41

ஆதலானபயமென்றபொழுதத்தேய பயதானம்
ஈதலே கடப்பாடென்பதியம் பினீரென்பால் வைத்த
காதலானினிவேறெண்ணக் கடவதென்கதிரோன்மைந்த
கோதிலாதவனை நீயே யென்வயிற் கொணர்தியென்றான். 42

குகனொடுமைவரானே முன்புபின்குன்று சூழ்வான்
மகனொடுமறுவரானே மெம்முழையன்பின் வந்த
அகனமர் காதலைய நின்னொடு மெழுவரானேம்
புகலருங்கானந்தந்து புதல்வராற் பொலிந்தானுந்தை. 43

## திருவடிப்ரபாவம்.

கண்டகன்மிசைக் காகுத்தன் கழற்றுகள் கதுவ
உண்டபேதைமை மயக்கற வேறுபட்டுருவங்
கொண்டு மெய்யுணர்பவன் கழல்கூடிய தொப்பப்
பண்டை வண்ணமாய் நின்றனண்மாமுனி பணிப்பான். 44

(39) முதல் (43) வரை உயுத்தகாண்டம். விபீடணனடைக் கலப்படலம்.

(44) முதல் (46) வரை பாலகாண்டம். அகலிகைப்படலம்.

இவ்வண்ண நிகழ்ந்த வண்ணமினியிந்த வுலகுக்கெல்லாம்
உய்வண்ணமன்றிமற்றோர் துயர்வண்ண முறுவதுண்டோ
மைவண்ணத்தரக்கி போரின் மழை வண்ணத் தண்ணலே யுன்
கைவண்ணமங்கு கண்டேன் கால் வண்ணமிங்கு கண்டேன். 45

அஞ்சனவண்ணத் தான்றனடித்துகள் கதுவாமுன்னம்
வஞ்சிபோலிடையாண் முன்னை வண்ணத்தளாகி நின்றாள்
நெஞ்சினாற்பிழைப் பிலாளை நீயழைத்திடுகவென்னக்
கஞ்சமாமுனிவனன்ன முனிவனுங் கருத்துட் கொண்டான். 46

மதிநல்யானையனையா னிலம் வகிர்ந் தகுழிவாய்
நதமுலா வுநனி நீர் வயினழுந் தநவை தீர்
அதவமாய் நறுநெயுண்டுலகி லன்பர்கருதிற்
றுதவுசே வடியினா லமலனுந் துதனுமே. 47

பட்டதன்மையுமுணர்ந்து படர்சாபமிடமுன்
கட்டவன் பிறவி தந்த கடையானவுடறான்
விட்டு விண்ணிடை விளங்கினன் விரிஞ்சனெனவோர்
முட்டைதந்ததனில் வந்தமுதன் முன்னவனினே. 48

## சரணாகதி வைபவம்.

நறைத்தருவுடைய கோனுநான்முகக் கடவுடானும்
கறைத்தருகளனு மற்றைக்கடவுளர் பிறருந்தொக்குப்
பொறுத்தருண் முனிவநின்னைப் புகல்புகுந்தவனைப் போற்றும்
அறத்திறனன்று தாரகணத்தொடுமமை கவென்னா. 49

(47) (48) ஆரணியகாண்டம். விராதன்வதைப்படலம்.

(49) பாலகாண்டம். மிதிலைக் காட்சிப்படலம்.

# இராமாவதாரத்திரு.

## திருவவதாரம்.

ஆயிடைப்பருவம் வந்தடைந்த வெல்லையின்
மாயிரும் புவிமகண் மகிழ்வினோங்கிட
வேய்புநர் பூசமும் விண்ணுளோர்புகழ்
தூயகற்கடகமு மெழுந்துதுள்ளவே. 1

சித்தருமியக் கருந்தெரிவை மார்களும்
வித்தகமுனிவரும் விண்ணுளோர்களும்
நித்தருமுறை முறை நெருங்கியார்ப்புறத்
தத்துறலொழிந்து நீடருமமோங்கவே. 2

ஒருபகலுலகெலா முதரத்துட்பொதிந்
தருமறைக் குணர்வருமவனை யஞ்சனக்
கருமுகிற் கொழுந்தெழில் காட்டுஞ்சோதியைத்
திருவுறப் பயந்தனடிறங் கொள்கோசலை. 3

ஆசையும் விசும்புநின்ற மரரார்த்தெழ
வாசவன் முதலினர் வணங்கி வாழ்த்துறப்
பூசமுமீனமும் பொலிய நல்கினாள்
மாசறு கேகயன் மாது மைந்தனை. 4

தளையவிழ் தருவுடைச்சயில கோபனுங்
கிளையுமந்தரமிசை கெழுமியார்ப்புற
அளை புகுமரவினோடலவன் வாழ்வுற
இளைய வற்பயந்த ளினிளையமென்கொடி. 5

(1) முதல் (7) வரை. இராமாவதாரம், பாலகாண்டம், திருவவதாரப்படலம்.

படங்கிளர் பஃறலைப் பாந்தளேந்துபார்
நடங்கிளர் தாமறை நவில நாடகம்
மடங்கலு மகழுமே வாழ்வினோங்கிட
விடங்கிளர்விழி யினாண்மீட்டு மீன்றனள். 6

மேடமாமதி திதிநவமி மீன்கழை
நீடுறு மாலை கற்கடக நீதிசேர்
ஓடைமாகளிறனானு தயராசிகோள்
நாடினே காதசர் நால்வருச்சரே. 7

இரும்பனைய கருநெடுங்கோட்டிணையேற்றின் பணையேற்ற
பெரும்பியலிற் பளிக்குநுகம்பிணைத்ததனோடிணைத்தீர்க்கும்
வரம்பின் மணிப்பொற்கலப்பை வயிரத்தின் கொழுமடுத்திட்
டுரம்பொரு வினிலம் வேள்விக்கலகில் பலசாலுழுதேம். 8

உழுகின்ற கொழு முகத்தினுதிக்கின்ற கதிரொளிபோல்
பொழிகின்ற புவிமடந்தை திருவெளிப்பட்டெனப்புணரி
எழுகின்ற தெள்ளமுதோடெழுந்தவளு மிழிந்தொதுங்கத்
தொழுகின்ற நன்னலத்துப் பெண்ணரசி தோன்றினாள். 9

குணங்களையென் கூறுவது கொம்பினைச் சேர்ந்தவையுய்யப்
பிணங்குவன வழகிவளைத்தவஞ்செய்து பெற்றதுகாண்
கணங்குழையா ளெழுந்ததற்பின் கதிர்வானிற் கங்கையெனும்
அணங்கிழியப் பொலிவிழந்த வாறொருத்தார் வேறுற்றார். 10

## திருமணம்.

நம்பியைக்காண நங்கைக்காயிரம் நயனம்வேண்டும்
கொம்பினைக் காணுந்தோறுங்குரி சிற்குமன்னதேயாம்
தம்பியைக் காண்மினென்பார் தவமுடைத்துலகமென்பார்
இம்பரிந்நகரிற்றந்த முனிவனை யிறைஞ்சுமென்பார். 11

(8) முதல் (11) வரை இராமாவதாரம். பாலகாண்டம். கார்முகப் படலம்.

எங்கள் செய்தவத்தினிவிராம னெனவந்தோன்
சங்கிெனொடு சக்கரமுடைத் தனிமுதற்பேர்
அங்கணரசாத வினவ்வல்லிமலர் புல்லும்
மங்கையிவளாமென வசிட்டன் மகிழ்வுற்ருன். 12

நய்வளநவிற்றுமொழி நண்ணவரலோடும்
வய்யநகர் கொற்றவனு மாதவருமல்லார்
கைகடலைபுக்கன கருத்துளதுமெல்லாம்
தெய்வமென வுற்றவுடல் சிந்தைவயமன்றே. 13

மன்றலின் வந்து மணத்த விசேறி
வென்றிநெடுந்தகை வீரனுமார்வத்
தின்றுணை யன்னமு மெய்தியிருந்தார்
ஒன்றிய போகமும் யோகமுமொத்தார். 14

கோமகன் முன்சனகன் குளிர்நன்னீர்
பூமகளும் பொருளும்மென நீயென்
மாமகடன்னெடு மன்னுதி யென்னுத்
தாமரையன்ன தடக்கையினீந்தான். 15

வெய்யகனற்றலை வீரனு மந்நாள்
மய்யறு மந்திர முற்றும் வழங்கா
நெய்யமையாகுதி யாவையு நேர்ந்தான்
தய்யற ளிர்க்கை தடக்கை பிடித்தான். 16

பங்குனி யுத்தரமான பகற்போ
தங்கணிருக்கினி லாயிரநாமச்
சிங்கமணத்தொழில் செய்ததிறத்தான்
மங்கல வங்கி வசிட்டன் வகுத்தான். 17

வள்ளறனக்கிளையோர் கடமக்கும்
எள்ளலில் கொற்றவன் யான்பினளித்த
அள்ளன்மலர்த்திரு வன்னவர்தம்மைக்
கொள்ளுமெனத்தமரோடு குறித்தான். 18

---

(12), (13) இராமாவதாரம். பாலகாண்டம். கோலங்காண்படலம்.
(14) முதல் (19) வரை, இராமாவதாரம், பாலகாண்டம். கடிமணப்படலம்.

கொய் நிறை தாரன்குசத்துவசப்பேர்
நெய்நிறை வேலவன் மங்கையர் நேர்ந்தார்
மய்நிறை கண்ணியர் வானுறை நீரார்
மெய்நிறை மூவரை மூவரும் வேட்டார். 19

## திருவபிடேகம்.

மாணிக்கப்பலகை தைத்த வயிரத்தின் கால்கள் சேர்த்தி
யாணிப்பொன் சுற்று முச்சி யழகுறச் சமைத்தபீடம்
ஏணுற்ற பளிக்கு மாடத்திட்டனரதனின் மீது
சேணுற்றதிரடோள் வீரன்றிருவொடும்பொலிந்தான் மன்னோ.20

மங்கல கீதம்பாட மறையொலி முழங்க வல்வாய்ச்
சங்கினங்கு முறப் பாண்டிறண்ணுமை யொலிப்பத்தாவில்
பொங்குபல்லி யங்களார்ப்பப் பூமழை பொழிய விண்ணோர்
எங்கணாயகனை வெவ்வேறெ திரபிடேகஞ் செய்தார். 21

மாதவா மறைவலாளா மந்திரக கிழவா மறறும
மூதறிவாளருள்ளஞ் சான்றவர்முத நீராட்டச்
சோதியான் மகனுமற்றைத் துணைவருமநு மன்றானும்
தீதிலா விலங்கை வேந்தும் பின்னபிடேகஞ் செய்தார். 22

அங்கண்வானுலகந்தாய வடிமலர்த்த விசோணாட்டும்
கங்கைவார் சடையினேற்றான் கண்ணுதலொருவனிந்நாள்
சிங்கவேறனையான் செய்ய திருமுடியாட்டு நன்னீர்
எங்கணேற்றன்னோன் வாழு மென்றனர் புலவரெல்லாம். 23

மரகதசயிலஞ் செந்தா மரைமலர்க் காடு பூத்துத்
திரைகெழு கங்கை வீசுந் திவலையா னனைந்து செய்ய
இருகுழை தொடரும் வேற்கண் மயிலொடு மிருந்ததேய்ப்பப்
பெருகிய செவ்வி கண்டார் பிறப்பெனும் பிணிகடீர்ந்தார். 24

---

(20) முதல் (28) வரை இராமாவதாரம், உயுத்தகாண்டம், திருமுடிசூட்டுப் படலம்.

தெய்வ நீராடற் கொத்த செய்வினை வசிட்டன் செய்ய
அய்யமில் சிந்தையானைச் சுமந்திர வமைச்சனோடு
நொய்தினி னியற்றி நோன்பின் மாதவனுனித்துக்காட்ட
வெய்தினி னியன்ற பல்வேறிந்திரற் கேயவென்ன. 25

## திருமுடிசூடல்.

அரியணை யநுமன்றாங்கவங்கதனுடை வாளேந்தப்
பரதன் வெண்குடை கவிக்க விருவருங்கவரிவீச
விரைசெறி குழலியோங்க வெண்ணெயூர்ச் சடையன்றங்கண்
மரபுளோர் கொடுக்கவாங்கி வசிட்டனே புனைந்தான் மௌலி. 26

வெள்ளியும் பொன்னுமென்போர் விதிமுறைமெய்யிற்கொண்ட
ஒள்ளிய நாளினல்ல வோரையி னுலக மூன்றும்
துள்ளினகுனிப்பமௌலி சூடினான் கடலின் வந்த
தெள்ளிய திருவுந் தெய்வப் பூமியுஞ் சேருந்தோளான். 27

சித்த மொத்தனனென்றோது ந்திரு நகர்ச்செல்வமென்ன
உத்தமத் தொருவன் சென்னி விளங்கியவுயர்பொன் மௌலி
ஒத்துமெய்க்குவமை கூரவோங்கு மூவுலகத்தோர்க்கும்
தத்த முச்சியின்மேல் வைத்த தொத்தெனத்தளர்வு தீர்ந்தார். 28

### பயன்.

இராவணன்றன்னை வீட்ட யிராமனாய் வந்து தோன்றித்
தராதல முழுதுங் காத்துத் தம்பியுந்தானுமாகப்
பராபரமாகி நின்ற பண்பினைப்பகருவார்கள்
நராபதி யாகிப்பின்னு நமனையும் வெல்லுவாரே. 29

வடகலை தென்கலை வடுகு கன்னடம்
இடமுள பாஷையாதொன்றினாயினும்
திடமுள ரகுகுலத்திராமன் றன்கதை
அடைவுடன் கேட்பவ ரமர ராவரே. 30

(29) உயுத்தகாண்டம். விடைகொடுத்த படலம்.

# சடகோபரந்தாதி.

தோன்றுவுபநிடதப் பொருடோன்ற லுற்றார் தமக்குஞ்
சான்றாமிவை யென்றபோது மற்றென் பலகாலுந் தம்மின்
மூன்றுயினவு நினைந்தாரணத்தின்மும்மைத்தமிழை
யீன்றான் குருகைப் பிரானெம்பிரான் றனிசைக்கவியே. 1

ஆயிரமா மறைக்கும் மலங்கார மருந்தமிழ்க்குப்
பாயிரநாற் கவிக்குப் படிச்சந்தம் பலுவற்கெல்லாந்
தாயிரு நாற்றிசைக்குத் தனித்தீபந் தண்ணங் குருகூர்ச்
சேயிருமா மரபுஞ் செவ்வியான் செய்த செய்யுட்களே. 2

கொடி யெடுத்துக்கொண்டு நின்றேனினிக்கொடுங் கூற்றினுக்கோ
ரடியெடுத்துக் கொண்டென்பான் வரலாகுங் கோலாரணத்தின்
படியெடுத்துக் கொண்டமாறனென்றாற் பதுமக்கரங்கண்
முடியெடுத்துக்கொண்ட வந்தணர்தாளென் முடியெனவே. 3

அந்தணர்க்கோ நல்லருந்தவர்க்கோ வன்றியோகியராய்
வந்தவர்க்கோ மறைவாதியர்க் கோமகரக்குழைசேர்
சுந்தரத் தோளனுக்கோவ வன்றொண்டர்கட்கோ சுடர்தோய்
சந்தனச் சோலைக் குருகைப்பிரான் வந்து சந்தித்ததே. 4

சந்தியுஞ் சந்திப்பதமு மவைதம்மிலே தழைக்கும்
பந்தியும் பல்லலங்காரப் பொருளும் பயிலுகிற்பீர்
வந்தியும் வந்திப்பவரை வணங்கும் வகையறிவீர்
சிந்தியும் தென்குருகூர் தொழுதாட் செய்யுந்தேவரையே. 5

மூர்த்தத்தினை யிம்முழுவேழுலகு முழுகுகின்ற
தீர்த்தத்தினைச் செய்ய வேதத்தினைத் திருமால் பெருமை
பார்த்தற்கருளிய பாரதத்தைப் பணித்தானு நின்ற
வார்த்தைக் குருகைப் பிரானுங் கண்டானம் மறைப் பொருளே. 6

சோராதனவுளவோ பெருஞ்செல்வர்க்கு வேதஞ்செப்பும்
பேராயிரந்திண் பெரும்புய மாயிரம் பெய்துளவத்
தாரார் முடியாயிரங்குரு கூர்ச்சட கோபன்சொன்ன
வாராவமுதங் கவியாயிரமவ்வரி யினுக்கே. 7

இழைத்தாரொரு வருமில்லாமறைகளை யின்றமிழாற்
குழைத்தார் குருகையிற் கூட்டங்கொண்டார் குமரித்துறைவர்
மழைத்தார் தடக்கைகளாலென்னை வானின்வரம் பிடைநின்
றழைத்தாரறி வுந்தந்தாரங்கும் போயவர்க்காட் செய்வனே. 8

உரிக்கின்ற கோடலினுந்து கந்தம்மென வொன்றுமின்றி
விரிக்குந்தொறும் வெறும்பாழாய் விடும்பிறர் புன்கவிமெய்
தெரிக்கின்ற கோச்சடகோ பன்றன்றெய்வக் கவிபுவியிற்
சுரிக்கின்ற நுண்மணலூற் றொக்குந்தோண்டச் சுரத்தலினே. 9

பாவகத்தாற்றன் றிருவவதாரம் பதினொன்றென்றிப்
பூவகத்தாரறியாத வண்ணந்தன்னையே புகழ்ந்து
நாவகத்தாற் கவியாயிரம்பாடி நடித்தளித்த
கோவகத்தாற்கன்றி யென்புறத்தார் செய்குற்றேவல்களே. 10

அவரேயயற்குமாற்கு மல்லாவமரர்க்கு மெல்லாம்
பவரேகையுற்றென் பணிகொள்ளுமோ படர்ரீனிட்ட
நவரேகையுட் கொள்ளச்செய்த தல்லானம்பி மாறனைப்போ
லெவரே திருவாயிர மோக்கமாலை யிசைத்தவரே. 11

மன்றேபுகழுந் திருவழுந்தூர் வள்ளன் மாறனைமுன்
சென்றே மதுரகவிப் பெருமாடென்றமிழ்த் தொடையி
லொன்றே பதிக முரைத்தவன் பொன்னடி யுற்றுநின்று
னென்றே பதிகம் பதிகமதாக விசைத்தனனே. 12

ஸ்ரீ :

# கம்பர் சீர்ப்பதிகம்.

சீரார்திரு வழுந்தூரிலே சீரேபெற வாழும்
சீராருய ராவேயமர் சீரப்பனே பணிசெய்
சீரார்நல வுச்சற்கொரு சீரார்சுத னுவான்
சீரார்தரு கம்பத்திடை சீரேபெறத் தோன்ற 1

சீராரவ னுடனேயதைச் சீரேபெற வெடுத்தே
சீராரதன் தேசார்நலம் சேர்சோதியே கண்டே
சீராரெம வாழ்வேயெனச் சீர்நேரதைப் போற்றிச்
சீரார்நலம் வாய்ந்தேயமர் சீரார்தன திலமார் 2

சீரார்தன தில்லாள்கையில் சீரேபெறத் தரவே
சீராகவே வளரும்மதைச் சீராட்டியே வளர்க்கச்
சீரார்நலக் கம்பன்னெனச் சீர்நாமமே யிடவே
சீரால்மிகு மேன்மையுடன் சீராகவே வளர்வாய் 3

சீரார்வர கவியேயெனச் சீர்கல்வியே கற்றோய்
சீரார்நலக் கவிமன்னெனச் சீரார்புகழ் வாய்ந்தோய்
சீரார்தரு சீர்ப்பன்னிரு சீரார்நல வாழ்வார்
சீராருயர் கூர்மாமதி சீரேபெற வுணர்ந்தோய் 4

சீரார்குணச் சீராமனை சீரேபெறக் கற்றோய்
சீராரவன் சீர்காதையை சீரேய்சுதை செய்தாய்
சீராரதை சீர்சேர்நலச் சீரங்கமே சென்றே
சீரார்நலச் சீர்சிங்கரின் சீர்மன்றிலே நலமார் 5

சீரார்தர வரங்கேற்றவே சீர்நேருடன் செல்லச்
சீர்ச்சிங்கனும் சீர்நஞ்சட கோபன்றிருச் சீரே
சீரார்கவி பாடிப்பினர் சீரேபெற வருள
ஏரார்மதிச் சீர்வாரிதி யிறையாஞ்சட கோபர் 6

சீரார்நல வந்தாதியே சீர்பேரிலக் கியமாய்ச்
சீராகவே செய்தேயதைச் சீர்த்திருமுனைப் படித்தாய்
சீரார்நலச் சீர்சிங்கனும் சீராய்ப்பினர்ப் போற்றிச்
சீரார்நல ராமாயணச் சீர்பாடலை வுகந்தார். 7

சீர்மல்குவி சிட்டத்துவி தச்சீர்மறை யுச்சிச்
சீரார்நலச் சீர்தன்னுடன் சீரேபெறச் செய்தே
சீரார்நல வுலகெங்குமே சீர்நாரணர் செந்தாள்
சீராருயிர்க் கோர்காவலச் சீரேய்திரு வேற 8

சீரார்நல வாழ்வாரெனச் சீரேய்விரு தூத
சீராலுயர் குருகூர்வரு சடகோபனார் தானே
சீரார்திட முடன்போற்றியே சீராகவே வாழும்
சீரார்நல மதுரக்கவி சீர்பாடலே பாடி 9

சீரார்நலச் சீரேபெற சீர்சேரவர் கற்பே
சீராகவே வாய்ந்தேயுயச் சீர்த்தொண்டினைச் செய்வோய்
சீராலுய ருன்பொன்னடிச் சீரேபெறச் செய்தான்
சீரார்திருப் பதிகம்மதிச் சீர்க்கோவலன் வாழ்வான். 10

ஸ்ரீ:

# கம்பரிருபது.

அவியென் றவாவி யகமென் றளாவி
யரியென் றுலாவு மொழியாம்
கவியென் றவொன்று கதியென் றுசென்று
யவனின் றுநன்றுநலனே
புவியென் றுநீடு புகழென் றுநாடு
புரியென் றுசங்க மொருநான்
றிவனென் றறைந்த வொலியென் றுமெங்கு
நிறைகம் பனென்ப னவனே. 1

விளக்கம் பரத்தே விளங்கத் தெளிக்கும்
ஒளிக்கம் பனென்னும் வளக்கோ ளரிக்கே
கொளக்கொம் பனென்றே வளக்கா தல்விள்ளும்
உளக்கம் பனந்தா விளக்கொன் றுதந்தான். 2

சடைக்கொள் ளூவேதச் சிரக்கம் பனூரே
சடைக்கள் துளிப்பச் சிரக்கம் பமேவும்
கடைக்கண் வழிக்கோ னடத்தும் கவிக்கோப்
புடைக்கம் பநாடன் புகழ்ப்பா டுவாமே. 3

கம்பத்தி டைத்தோன்று மாலாய கம்பன்
தம்பத்தி மைக்கோரி லக்காய கம்பன்
செம்பத்த னென்றேது சம்பத்த ரும்பக்
கம்பத்த டிக்கந்த கம்பன்ம லர்ந்தான். 4

தாவுந்தி ருச்செந்த மிழ்ச்செல்வர் தாங்கும்
யாவுந்த னக்காக வாருங்க விச்சீர்
மேவுந்தி ருச்சக்க ரத்தேறு தேவுக்
கேவுஞ்சி ரக்கம்ப னங்கம்ப னென்பான். 5

அந்தமின் மறையி னுச்சிக் கந்தமார் சந்த மேறும்
முந்தையா யிரமு மிழ்ந்த மாறனார் பதும பாதம்
வந்துதன் முடிக்கண் பூக்கும் வரகலர் பொலிய வாங்கே
முந்தனே மகுடம் சாய்க்க முத்தமிழ் குழைத்தான் கம்பன். 6

கொடைமைநின் றுடைமை கொள்ளுங் கோளரிப் பரம நாமம்
உடையனே சடைய னூரு மொருகுரு வெனத்தாள் பூத்தே
படையெழும் மறையொ லிப்பப் பசுந்தமிழ் பொதிந்த வாய்மைக்
கொடையனுக் கம்ப நாடன் கொண்டவ னுமை மானுன். 7

முழுதுணர் வழுதி நாடர் முகமலர்ந் தருளி யுள்ளத்
தெழுதுமா றுதய மாகு மமுதமே யனைய செஞ்சொல்
தழுவுமா றணிய மூந்தூ ரழகனு மெழில்ப ரந்தே
மழையெனப்பொழிய வன்னூர் தமிழெனக்குழைந்தான் கம்பன். 8

பவியெனப் பிறர்ந டுங்கக் கவியெனத் தமர்க ளிக்க
அவியெனத் தனத டிக்கே யரிமுக னுரிமை கொள்ளக்
குவியநற் கரங்க ளெங்கும் முடிமிசைக் கம்ப னென்றே
நவிலநின் றவனி யாளுங் கவிகளுக் கிறைவன் வாழி. 9

எல்லையின் மறையி னுணை யாங்குமே தாங்கி யோங்கும்
வில்லணை வேலி காக்கும் வேதமா நாதச் சிங்கன்
புல்லணைப் பள்ளி பூக்கும் புதுமணப் புகழின் வண்ணச்
சொல்லணைக் கம்ப னென்றே செந்தமிழ்க் கம்பொ லித்தான். 10

உடையா னிடையே யுளவாகியெலாம்
தடையா துமிலா துலகா யிலகும்
படியீ தடலொன் றிதுகண் டவரே
அடையென் றுடையா னடியே யடைவார். 11

அடைபூ வெனவே தடைகூ றிடிலென்
அடையென் றதினுண் பொருளொன் றறியார்
அடையென் றதுவே விடையா யிடுமால்
தடையின் றியருள் தருமன் னவனே. 12

என்றொரு கம்பமெ னத்தனி நின்றே
நன்றுல கொன்றுமி றைத்தகை கண்டே
வன்றரு மத்திரு நின்றுவி ளங்கும்
நன்றித ருந்தமிழ் நாயகன் கம்பன். 13

அப்பனே திரு நார ணப்பொரு ளப்பினுள் ளமிர் தம்திரு
இப்பரம் பொருள் தேரு மாமறை யேவுமா றவர்க் காவியே
தப்புறு தவி தந்த மாமதி யன்ப ரேபெறு மின்பமா
மொப்பருந் தமிழென்னு மாகட லுண்டு மிழ்ந்தவன் கம்பனே. 14

சித்தசித் திறையென்ற முத்திற மெய்யறைந் தெழு மாமறை
நித்தமொன் றென வொன்று மோரிறை நின்றவா றிது நன்றுகண்
டத்தனுர் கழற் கன்பு செய்தவர்க் கன்பனு மொரு கம்பனே
முத்தமிழ்த் துறை யுத்த மக்கவி சித்திரித்தவ னுத்தமே. 15

வித்தகர் யாவரு மெத்தகை யென்றே
நித்தமு மொத்தொரு கொத்தென நத்தும்
பத்திமை மைதரு கைவரு கம்பன்
சித்திர மாயைக ளொத்திற மம்மா. 16

அத்தன கத்தமி ழத்தமு றத்தான்
அத்தனெ விக்குண மத்தனே யும்மே
ஒத்தனு ருப்பட மொன்றெழு தத்தன்
சித்திர மொன்றதி னின்றது வையம். 17

வாயுடை யாவரும் வாய்மை புரந்தே
தாயிடை நின்ருெரு கன்றென வாழும்
சேயடை யூடுயிர் தந்தருள் செய்யும்
பாயமு தத்தமி ழாயவன் கம்பன். 18

காப்பணி முன்னெளி கிங்கிணி மின்ன
யாப்பணி யங்கமொ டெங்குமொ ருங்கக்
கோப்பணி மன்னம கிழ்த்தமிழ் கொள்ளும்
நாப்பணி மன்னவ னன்னவன் கம்பன். 19

ஓது மாமறை யோதிம வேதியன்
சோதி வாயுமிழ் செந்தமி ழாரணப்
போத மாமடு லோடிரு கண்ணிவாய்
ஓது மோர்திரு வாய்மையன் வாழியே. 20

உந்தி யுந்துமா கந்த முந்தனே
தந்தை தானெனத் தந்த செந்தமிழ்
முந்தை யாயிரம் புந்தி பூத்தெழும்
சந்த மோங்குநம் சங்கம் வாழியே. 21

கேசரி நற்ருட்
பூசனை யென்றீ
தாசை யினிப்பாக்
கேசவன் செய்தான்.

**பொங்கும் மங்கலம் எங்குந் தங்குக.**